## நூல் விவரம்


| | | |
|---|---|---|
| தலைப்பு | : | **சித்தர்கள் அருளிய இரசமணி மகத்துவம்** |
| ஆசிரியர் | : | தி. நா. அங்கமுத்து முதலியார் |
| உரிமை | : | பதிப்பகத்தாருக்கு |
| பதிப்பு, ஆண்டு | : | இரண்டாம் பதிப்பு 2005 |
| மொழி | : | தமிழ் |
| நூல் அளவு | : | 18.5 X 12.5cm (கிரவுன்) |
| தாள் | : | வெள்ளைத்தாள் 11.6 கி.கி. |
| எழுத்து | : | 11 புள்ளி |
| பக்கங்கள் | : | 64 |
| வெளியீடு | : | **சங்கர் பதிப்பகம்**<br>சென்னை - 49. © 650 20 86 |
| விலை | : | **ரூ.15.00** |
| ஒளியச்சுக் கோவை | : | **ஏகம் கம்ப்யூட்டர்ஸ்**<br>சென்னை - 5. © 852 91 94 |
| அச்சிட்டோர் | : | சென்னை ஆர்ட் பிரிண்டர்ஸ்<br>சென்னை – 21. போன் : 55692807 |

6-3

# முன்னுரை

நம் நாட்டில் எண்ணற்ற சித்தர் பெருமக்கள் முற்காலத்தில் இருந்தனர். இன்றும் சூட்சும ரூபத்தில் உலவி வருவதாக நம்பிக்கையும் நிலவுகிறது. அவர்களுள் அகத்தியர் உள்ளிட்ட பதினெட்டு சித்தர்கள் குறிப்பிடத் தகுந்தவர்கள். அப்பெருமக்கள் இரசவாதம், இரச மருத்துவம் மற்றும் இரசமணி ஆகியவற்றைக் கண்டு மக்கள் நலமுடன் வாழ வழி வகுத்தனர். பாத இரசம் ஓர் காய கல்பம் என்றால் அதுமிகையல்ல.

அத்தகைய பாத இரசத்தைக் கொண்டு இரசமணிக் குளிகை கட்டி சித்தர்கள் பற்பல அற்புதங்கள் செய்திட்டனர். தேரையர் இந்த இரசமணியின் மகத்துவத்தை கீழ்காணும் பாடல் வாயிலாகக் கூறுகிறார்.

*நீயென்றும் நானென்றும் வேறுமில்லை*
*நிராகரம் போல வுந்தனுக்கு காணும்*
*நாயென்றும் ஜன்மத்தால் தாண்டிய ஏத்தும்*
*நற்ஜென்மம் அல்லவப்ப சித்தன் சித்தன்*
*பாயென்றாய் கூடுவிட்டு கூடுபாயும்*
*பதராமல் இருந்து கொள்ள கவுனம் சாரும்*
*நோயென்ற வறுமை எல்லாம் அகன்று போகும்*
*நுண்பனியாய் சிவலிங்க போதம் தானே.*

என்னும் அவர்தம் பாடல் வாயிலாக இரசமணியின் மகத்துவம் நமக்கு விளங்குகிறது. 'சித்தர்கள் அருளிய இரசமணி மகத்துவம் என்னும் இந்நூலில் இரசமணி மற்றும் அதன் மகத்துவம் மட்டுமல்லாது சித்தர்கள் செய்திட்ட இரசவாதம், இரச மருத்துவம், இவற்றிற்கு அப்பெருமக்கள் பயன்படுத்திய மூலிகைகள், உப்பு, பாஷான வகைகள், பாஷான உபரசங்கள் அவற்றின் செயல் திறன்கள் ஆகியவை பற்றியும் செயற்கை முறையில் வாதப் பொன், வாத வெள்ளி தயாரிப்பு முறைகள் பற்றியும் விரிவாகக் கூறியுள்ளதால் இந்நூல் இரசவாதம் பற்றி அறிந்திட முயல்வோருக்கும், இரசவாதம் செய்வோருக்கும் பயனுள்ளதாக அமையும் என்பதில் எள்ளளவும் சந்தேகம் இல்லை.

படித்துப் பயன் பெறுக.

*அன்புடன்*

**தி.நா. அங்கமுத்து முதலியார்**

# பதிப்புரை

சித்தர்கள் என்றால் சித்துகள் செய்பவர்கள் என்று பொருள். சித்து என்பது எல்லாவற்றையும் உணர்ந்து கொள்ளும் தன்மை என்று பொருள்.

சித்தர்கள் ஆன்மீகம், வைத்தியம் பற்றி பல பாடல்களை மறை பொருளுடன் நமக்கு விட்டுச் சென்றுள்ளனர். பல பாடல்கள் நமக்குக் கிடைக்காமலும் போய்விட்டன.

மறைபொருளாய்ப் பேணப்பட்டு அதனாலேயே உருவழிந்து மறைந்து போவதற்கு ஆளாகிவிட்ட சித்தர்களின் மருத்துவ உண்மைகளை இருட்டிலிருந்து வெளிச்சத்திற்குக் கொண்டு வர - ஒளி காண எடுத்த முயற்சிகளில் ஒரு கடுகளவே இந்த இரசமணி மகத்துவம் என்னும் நூலாகும்.

மிகக் கொடிய நோய்களையும் நீக்கும் வல்லமை சித்த மருந்துக்கு உள்ளது என இப்போது பல வெளிநாட்டு மருத்துவ வல்லுநர்களும் மனப்பூர்வமாக ஒப்புக் கொண்டுள்ளனர்.

சித்தர்கள் அருளியதாலேயே இம் மருத்துவத்திற்கு சித்த மருத்துவம் என்ற பெயர் வந்தது. சித்தர் பெருமக்கள் தாங்கள் கண்ட உண்மைகளையும் நுணுக்கங்களையும், மூலிகைகள், பற்பங்கள், இரசமணிகளின் குணநலன்களைத் தம் மாணவர் களுக்கு ஓதுவித்தும், ஏடுகளில் பதிப்பித்தும் சென்றனர்.

காலப்போக்கிலும், இயற்கைச் சீற்றங்களான நில நடுக்கம், கடற்கோள், கவனிப்பார் இல்லாமை, வெளி நாட்டாரின் படையெடுப்பு போன்றவற்றாலும் பல ஏடுகள் அழிந்து போயின. பல ஏடுகள் அதன் சிறப்பு உணர்ந்தவர்

களாலும் அறியாதவர்களாலும் வெளிநாடுகளுக்கு எடுத்துச் செல்லப்பட்டன.

எஞ்சிய சில மருத்துவ ஏடுகளே இன்று நம்மிடம் உள்ளன. அவையும் மறைபொருளை உள்ளடக்கிய பாடல் வடிவிலேயே காணக்கிடைக்கின்றன. அதைப் படித்து உணரும் ஆற்றல் நம்மில் ஒருசிலருக்கே கைவரப் பெற்றுள்ளது.

சித்தர்கள் அப்படிச் சொன்ன வைத்திய முறைகளில் இரசமணி மிகச் சிறப்பு வாய்ந்தது. அதைப்பற்றி ஒரு எளிய முன்னுரையாகவேனும் ஒரு நூலை வெளிக் கொணர வேண்டும்; இராமருக்கு உதவிய சிறு அணில்போல சித்த மருத்துவத் துறைக்கு இந்நூலை விரிவாகக் கொண்டுவர வேண்டும் என்ற எண்ணத்தின் வெளிப்பாடே இந்நூல்.

இதனை வெளிக் கொணர எண்ணியதும் என் நினைவுக்கு வந்தவர் இந்நூலாசிரியர் திரு. தி.நா. அங்கமுத்து முதலியார் அவர்கள்தாம். என் எண்ணத்தைக் கூறியதுமே அதை மகிழ்வோடு ஏற்று மிக விரைவாக இந்நூலினை எழுதித் தந்துள்ளார். அவருக்கு எங்களது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

வாசக அன்பர்கள் இந்நூலினை வாங்கிப் படித்துப் பயன்பெற வேண்டுவதுடன், இது குறித்து சீரிய கருத்துக்கள் ஏதேனும் இருப்பின் அதனை எங்கட்குத் தெரிவித்தால் அடுத்த பதிப்புகளில் சேர்க்க உதவியாக இருக்கும்.

**–பதிப்பகத்தார்.**

# உள்ளடக்கம்

# சித்தர்கள் அருளிய
# இரசமணி மகத்துவம்

## 1. புவியும் இரசாயன மாற்றமும்

கணக்கிட இயலாத, பல்லாயிரம் வருடங்களுக்கு முன்பாக சூரியனில் இருந்து தெரித்து விழுந்த தீப்பிழம் பாகவே இப்போது நாம் வாழும் பூமி இருந்தது என புவியியல் ஆய்வுகள் கூறுகின்றன. இவ்வாறு சூரியனில் இருந்து தெரித்து விழுந்த தீப்பிழம்பு சீதோஷ்ண மாற்றங்களின் காரணமாக குளிர்ந்து அதன் சுற்றுப்புற மேல் பகுதி இறுக்க மடைந்து, கடினமாகி பூமியாக மாறியது எனவும் ஆய்வுகள் உரைக்கின்றன.

புவியின் மேல்பரப்பு மலைகளும், நிலப்பரப்புகளும், பெரும் நீர்ப்பரப்பாகிய கடல்களாகவும் மாறியும் கூட அதன் மையப் பகுதி கடும் வெப்பம் நிறைந்ததாகவே இருந்தது. இருந்தபோதிலும் கடும் சீதோஷ்ண மாற்றங்களால் உண்டான குளிர்ச்சியானது இம்மையப் பகுதியை வெகுவாகவே பாதிப்படையச் செய்தது. இதனால் புவிக்கோளம் பல முறைகள் சுருங்கி விரிந்தது. இதன் காரணமாக புவியானது பல முறைகள் உருமாற்றம் அடையலாயிற்று. காலப்போக்கில் இம்மாற்றங்களின் பயனாக புவியின் மேல் பரப்பில் கடல் பகுதியைத் தவிர நிலப்பகுதிகளில் பலவித உயிரினங்களும்,

தாவரங்களும் தோன்றின. நிலப்பகுதியில் இருந்த மண்ணுள்ளும், மலைப்பகுதிகளிலும் பல்வகை தாது உப்பு களும் உலோகக் கனிமங்களும் அடங்கியிருந்தன.

முன்கூறியபடி புவி சீதோஷ்ண மாற்றங்களால் மேலும் சுருங்கி விரியும்போது புவியின் மேல்பரப்பில் தோன்றிய பிரளயங்களால் சிலவகைத் தாவரங்கள் நசுக்கப்பட்டன. இவ்வாறு நசுக்கப்பட்டதால் அத்தாவரத்தில் இருந்து வெளியான சாறுகள் புவியின் வெடிப்புக்கு உள்ளான பகுதிகளில் சொட்டு சொட்டாகவோ, நீர்த் தாரையாகவோ உட்சென்ற போது அந்நீர்த்தாரை வழியில் இருந்த உலோகக் கனிமங்களின் மீது படலாயிற்று. இதனால் அவ்வுலோகக் கனிமங்களில் பெரும் இரசாயன மாற்றங்கள் நிகழ்ந்தன. இவ்வாறு நிகழ்ந்த இரசாயன மாற்றங்களின் விளைவாக சாறு படிந்த உலோகக் கனிமம் வேறு உலோகக் கனிமமாக மாறியிருக்கலாம். இவ்வாறு கூறிட காரணமும் உள்ளது. புவியில் தற்போதுள்ள உலோகச் சுரங்கங்களில் ஒரு கனிமம் வேண்டி தோண்டும்போது அவ்வுலோகக் கனிமம் மட்டுமல்லாது பிற உலோகக் கனிமங்களும் சேர்ந்து கிடைக்கும் வாய்ப்பு உள்ளது.

இதனைக் கொண்டே முற்காலத்தில் அக்குறிப்பிட்ட உலோகக் கனிமத்தின் மீது இரசாயனக் கிரியையை உண்டாக்கும் தாவரச்சாறுகள் படிந்து இருக்கலாம் என யூகிக்க வேண்டியுள்ளது.

## முற்காலத்திய அறிவியலாளர்கள் :

பண்டைய காலத்தில் நம் பாரதத் திருநாட்டில் சித்தர் பெருமக்கள் பலர் வாழ்ந்து வந்தனர். இச்சித்தர் பெருமக்கள் முன்கூறிய உலோக கனிம மாற்றங்களைக் கண்டனர். இவ்வகை மாற்றங்களுக்கான காரணங்களை ஆராயலானார்கள். அவர்களின் ஆராய்ச்சிகளின் பலனாக பற்பல அறிவியல் உண்மைகள் வெளிப்படலாயின.

அப்பெருமக்களின் கருத்துப்படி இவ்வுலகில் இருக்கும் அனைத்து பொருட்களும் அது அசையும் பொருளாக இருந்தாலும், அசையாத பொருளாக இருந்தாலும் அவை யாவுமே பஞ்ச பூதங்களில் இருந்து தோன்றியதாகக் கூறப்படுகிறது. தற்போதும் நம்மைச் சுற்றிலும் உள்ள இயற்கையின் மாற்றங்கள் யாவுமே பஞ்ச பூதச் செயல்பாடுகள் தான் காரணமாக அமைகின்றன என்னும் உண்மையினை அறிவியல் வல்லுநர்கள் ஒத்துக் கொள்ளவே செய்கின்றனர்.

சித்தர்களின் ஆய்வுக்கு வருவோம். அப்பெருமக்கள் செய்த மாபெரும் ஆய்வுகளின் பயனாக ஒவ்வொரு உலோகமும் அதற்குரிய குணங்களை தன்னுள் இருக்கும் ஒவ்வொரு அணுவிலும் கொண்டுள்ளது எனத் தெரியவந்தது. மேலும் அச்சித்தர்கள் ஒவ்வொரு உலோகத்தின் விரிவடையும் தன்மையும், சுருங்கும் தன்மையும் அதனுள் இருக்கும் அணுவின் திரட்சிக்கு ஏற்ப தீயினைத் தாங்கும் சக்தியைப் பெற்றுள்ளதாகக் கருதினர்.

இதனால் ஒரு உலோகத்தில் உள்ள அணுத்திரட்சியை மாற்றினால் அக்குறிப்பிட்ட உலோகம் மாறிடுமா என்னும் கேள்வி அவர்கள் மனதில் எழுந்தது. அக்கேள்விக்கான விடையை பல்வேறு ஆய்வுகளின் மூலம் கண்டறிந்திட முற்பட்டனர். அதன் பயனாக பாதரசத்தின் துணை கொண்டு உலோகத்தின் அணுத்திரட்சியை மாற்றி வெற்றியும் அடைந்தனர்.

மேலும் அறிவு, ஆன்மா, அரூபம், மாயம், வித்தை, ஞானம் என்னும் பல விளக்கங்கள் ஒரு சொல்லுக்குப் பொருளாக அமைகின்றன. அச்சொல் 'சித்து' என்பதே ஆகும். இத்தகைய சித்து நிலைகள் பலவற்றை பெற்ற பெரு மக்களையே நாம் சித்தர்கள் எனக் கூறுகிறோம்.

இப்பெருமக்கள் மாண்டுபோனவர்களை உயிர்ப்பித்தல், உடம்பை அணுவைப் போன்று சுருக்குதல், கூடு விட்டுக் கூடு பாய்தல், இறகு போன்று மெலிதல், இயற்கைக்குப் புறம்பான புதிய உருவினை எடுத்தல், தாம் எண்ணிய இடத்திற்கு

நொடிப் பொழுதில் சென்றடைதல், நெருப்பிலும் நீரிலும் நடத்தல், விஸ்வரூபம் எடுத்தல் என பற்பல அற்புதங்களை தாம் பெற்ற சித்துக்களின் வாயிலாக செய்து காட்டினர். மேலே கூறியவற்றையே எட்டுவகை சித்திகள் எனக் கூறுகின்றனர்.

இந்த எட்டு வகை சித்திகளையும் கைவரப் பெற்ற சித்தர்கள் பலர் உலகம் முழுமையும் பரவியிருந்தனர். இவர்கள் இன்னமும் சூட்சும ரூபத்தில் நம்முடன் இருந்திடுகின்றனர் என்னும் கருத்தும் நிலவுகிறது.

இவ்வாறு உலகம் முழுமையும் சித்தர்கள் பலர் இருந்திருந்தாலும் நம் தமிழகத்தில் வாழ்ந்த சித்தர்கள்தான் பலவகை நோய்களைப் போக்கி குணமாக்கும் வைத்திய முறையைக் கூறியருளியவர்கள். இவர்களே, மூலிகை களையும், உலோகங்களையும் நோய்களைக் குணமாக்கும் அருமருந்துகளாக மாற்றும் வழிமுறைகளை உலகுக்கு அருளியவர்கள் ஆவர். பௌதிக இயல்பினை இச்சித்தர்கள் நன்றாக அறிந்திருந்ததால், சரக்கு வைப்பு என்னும் செயற்கை முறை மூலம் பல வித மருந்துகளைத் தயாரித்ததோடு தாம் அறிந்திட்ட இரசாயன கலையை ஏட்டுச் சுவடிகளில் பதிப்பித்தும், தம் சீடர்கள் வாயிலாகவும் உலக மக்கள் அறியும்படி செய்தனர்.

உலோகக் கனிமங்களை, பற்பங்களாகவும், செந்தூரங்களாகவும் செய்திடும் திறமையை சித்தர்கள் பெற்றிருந்தனர். அக மருந்துகள் முப்பத்து இரண்டு, புற மருந்துகள் முப்பத்து இரண்டு என அறுபத்து நான்கு மருந்துகளிலும், உலோகங்களைப் புடம்போட்டு எடுத்து அதன் வாயிலாகத் தயாரித்த மருந்துகளே சிறப்பான மருந்துகளாகக் கருதப்படுகிறது.

மேலும் செயநீர், தீநீர் என்னும் திராவகம், சுண்ணம், களங்கு, கட்டு போன்ற அருமையான மருந்துகளை தயாரித்திடும் வழிமுறைகளை தங்கள் பாடல்களில் அருளிச் சென்றவர்கள் இந்த சித்தர்களே ஆவர்.

# 2. இரசவாதக் கலையில் அக்காலத்திய வல்லுநர்கள்

யோகம், வைத்தியம் என பற்பல கலைகளைப் பயிற்று வித்த நம் தமிழ்நாட்டுச் சித்தர் பெருமக்கள் கணக்கற்றோர் இருந்தாலும் பதினெட்டு பேர்களே ஆவர். அவர்களில் அகத்தியர், இராமதேவர், யூகிமுனி, போகர், காளங்கிநாதர், சட்டைமுனி, சித்த நாகார்ச்சுனர், புலிப்பாணி, மச்சமுனி ஆகியோர் குறிப்பிட்டுச் சொல்லக் கூடியவர்கள். இவர்கள் உள்ளிட்ட அனைத்து சித்தர்களுமே இரசவாதக் கலையிலும் தேர்ச்சி பெற்றவராய் இருந்தனர்.

இரசவாதக் கலையில் தேர்ச்சி பெற்ற ஒருவரை இரசவாதி என அழைக்கலாம். தாவரப் பொருள் அல்லது உயிர்ப் பொருள், அல்லது தாதுப் பொருள் என எதுவாயினும் அப்பொருளின் தன்மையை முதலில் இரசவாதி எனப்படுபவன் அறிந்திருத்தல் அவசியம்.

எடுத்துக் கொண்ட பொருள், ஒரு பொருளால் உரு வாக்கப் பட்டதா? அல் லது பல்பொருள் கலவையா என ஆராய்ந்திட வேண்டும். தனிப் பொருள் அல்லது பல்பொருள் கலவையாக அப்பொருள் இருந்திட இயற்கை காரணமா? அல்லது சுற்றுப் புறச் சூழ்நிலை காரணமா என்பதையும் அறிந்திட வேண்டும்.

அல்லது எடுத்தாளும் பொருள் வாயுவா? திரவ வடிவமா? அல்லது திடப்பொருளா? இவற்றில் எந்த வகையை அப் பொருள் சார்ந்தது என்பதையும் தெரிந்து கொள்ள வேண்டும்.

ஒரு பொருளின் குணம், செயல்பாடு, சுவை, வலிமை, வரலாறு என அனைத்தையும் பொருட் பண்பு நூல், பதார்த்த குண சிந்தாமணி, குணவாகடம், குணபாடம் ஆகியவற்றின் வாயிலாக இப்போதும் அறியப்படுகிறது.

பொதுவாக இவ்வுலகத்தில் இருக்கும் பொருட்களை அசையும் பொருள், அசையாப் பொருள் என இருவகைகளாகப் பிரித்திடலாம். தாதுப் பொருட்கள் நான்கு வகை ஆகும்.

1. நீரில் கரைந்தும், நெருப்பில் வெடித்தும் புகையும் குணங்களைக் கொண்டவை **உப்புக்கள்** ஆகும்.
2. நெருப்பில் புகைந்தாலும் நீரில் கரையாத தன்மை உடையவை **பாஷாணங்கள்** ஆகும்.
3. நீரில் கரையாமல், நெருப்பில் எரியவோ, புகைந்திடவோ செய்யாமல் இருக்கும் மணல் சத்து உள்ளவை **உபரசங்கள்** ஆகும்.
4. நீரில் கரையாமல், நெருப்பில் உருகி, பின் கெட்டிப் படுபவை **உலோகங்கள்** ஆகும்.

இப்படி அனைத்தையும் அறிந்து இக்கலையைப் பயிற்சி செய்பவனே இரசவாதி ஆவான்.

## 3. இரசவாதக் கலைக்குப் பயன்படும் பொருட்கள்

இக்கலையைப் பயின்றிட முற்படும்போது முதலில் தெரிந்து கொள்ள வேண்டியது குணபாடப் பகுதியாகும். இரசவாதத்திற்கு அடிப்படையாக உள்ளவை உலோகங்களும் அதற்குத் துணையான உப்புகள் மற்றும் உபரசங்கள் ஆகியவை ஆகும். இந்த அடிப்படைப் பொருட்களின் தன்மைகளைத் தெரிந்து கொள்ளவும் வேண்டும்.

எந்த ஒரு பொருளானாலும் அதில் தீமையும் இருக்கும். நன்மையும் இருக்கும். அதாவது அப்பொருளில் உள்ள தீய தன்மைகளையும், நல்ல தன்மைகளையும் அறிந்திட வேண்டும்.

இரசவாதம் செய்திடும் முன்பாக எந்தப் பொருளை நாம் பயன்படுத்துகிறோமோ, அப்பொருளில் இருக்கும், நாம் செய்ய இருக்கும் செயலுக்கு தீமை அளிக்கக் கூடிய தன்மை களைப் போக்கிக் கொள்ள வேண்டும். இதற்கு 'சுத்தி செய்தல்' என்று பெயர்.

இவ்வாறு சுத்தி செய்தலுக்கும் அடுத்து செய்ய இருக்கும் இரசவாதத்திற்கும் பலவிதமான கருவிகள் தேவைப்படும். இக்கருவிகள் எவ்வகையில் பயன்படுகின்றன. அவற்றை எவ்வாறு கையாள வேண்டும் என்பன போன்றவற்றையும் தெரிந்திருத்தல் அவசியம் ஆகும்.

இவ்வாறு சுத்தி செய்தல், இரவாதம் செய்தல், வீரியப் படுத்துதல் போன்றவற்றிற்கு மலர்கள், மூலிகைகள் போன்ற வற்றின் சாறுகள் தேவைப்படும். இத்தகைய மலர்கள், மூலிகைகள் ஆகியவற்றின் தோற்றம், செயல் திறன் முதலான வற்றையும் அறிந்திடல் அவசியம் ஆகும். முன் கூறிய அனைத்தையும் முற்றிலுமாக அறிந்த பின்னரே இரசவாதம் செய்திட முற்பட வேண்டும்.

சித்தர் பெருமக்கள் உலோகங்களில் எட்டு வகைகளை மட்டுமே இயற்கை உலோகங்களாகக் கருதுகின்றனர். அவை இரும்பு, எஃகு, தங்கம், தாமிரம், வெள்ளி, வெள்ளீயம், காரீயம், நாகம் போன்றவை ஆகும். இவ்வகை இயற்கை உலோகங்கள் தவிர பித்தளை, தரா, வெண்கலம் போன்ற வற்றை செயற்கை உலோகங்களாகக் கருதுகின்றனர்.

இவை தவிர திரவ ரூபமான உலோகம் ஒன்றும் உண்டு. அது பாதரசம் ஆகும். இயற்கையின் மாறுபாடுகளின் காரண மாக மலைகளில் சில விரிசல்கள் அல்லது விரிவுகள் உண் டாகக் கூடும். அச்சமயத்தில் நிலத்தின் மட்டத்திற்கு கீழாக பல மைல்கள் ஆழத்தில் இருந்திடும் நெருப்புக் குழம்பு கொதித்துக் குமுறி எரிமலையாக வெளிவரத் துவங்கும்.

இச்சமயத்தில் பூகம்பம் கூட ஏற்படக்கூடும். இவ்வாறு மலையின் அடிப்புரத்தில் பல மைல்கள் ஆழத்தில் இருக்கும் எரிமலைக் குழம்பு வெடித்து வெளியானதும் நிலத்தின் குமுறலானது அடங்கிடும்.

இவ்வாறு வெடித்துச் சிதறிய எரிமலைக் குழம்பு கொதி திரவமாக நிலப்பகுதிகளில் வழிந்து தேங்குகிறது. இவ்வாறு தேங்கிய அக்குழம்புப் பகுதியின் மையத்தில் இருப்பவை ஆவி யாகிக் குளிர்ந்ததும் சில பொருட்கள் நமக்குக் கிடைக்கின்றன. அவ்வாறு எரிமலைக் குழம்பில் இருந்து நமக்குக் கிடைக்கப் பெறும் பொருட்களில் ஒன்றே பாதரசம் ஆகும். இப் பாதரசம் ரசமாகவோ அல்லது லிங்கமாகவே கிடைத்திடும்.

பொதுவாக செந்நிறம் கொண்டதாக இருப்பதை **ரசம்** எனவும், கருமையாக உள்ளதை **இரசேந்திரம்** என்றும், மஞ்சளாக இருப்பதை **சூதம்** என்றும், பலநிறம் கொண்டதை **மிச்ரம்** என்றும், வெண்மையாக உள்ளதை **பாரதம்** எனவும் அழைப்பர்.

வெப்பம், சீதம் என இரு வீரியங்களையும் கொண்டு இப் பாதரசம் விளங்குவதால் இதனை எந்தத் துணை மருந்துடன் சேர்த்துக் கொடுக்கிறோமோ அத்துணை மருந்தின் தன்மை யைப் பெற்றிடும்.

மேலும் ரசத்தை ஏதேனும் ஒரு பொருளோடு சேர்த்து அரைக்கும் சமயத்தில் நீர் போல கலப்பதால் **ஜலகதி** என அழைப்பர். அழுக்காகப் பிரிந்து நின்றிடுவதை **மலபதி** எனவும், எத்தனை முறைகள் அரைத்தாலும் கலவைப் பொருட்களை விட்டுப் பிரிந்து நிற்குமாயின் அதனை **ஹம்சக்தி** எனவும், எரித்திடும் சமயத்தில் ஆவியாகும் நிலைமையை அடைவதை **தூமகதி** எனவும் அழைப்பர்.

**பாதரசத்தை இனிமை, சங்கரன் விந்து, பனிமை, பாயந்திடு தூமம், கனிமை, கேசரி, அந்தரகந்தன், தூமம், மந்தரம், மகிபனி, விந்ரமசிலை, காவக்குடியோன், பூதம், பக்கிரம், ஞானம்,**

சுக்கிலம், விண் மருந்து ரதம், சாமம், சூரிய விவோதி, சிவசக்தி, பராபரம், சரக்கிற் கலந்திடு சிவன், பாவன், வராட்டியன், மதாமரம், மாருதம், கணவன், வாசுகி நாதன், கனல், பதிணெண் பத்தி, சிந்தூரம், சுயம்படு, விண்ணிநீர், சூதம் எனவும் இன்னும் பற்பல பெயர்களாலும் அழைக்கப்படும் இப்பாதரசம் சங்க கால இலக்கியங்களிலும், பிறமொழி இலக்கியங்களிலும் குறிப்பிடப் பட்டுள்ளது.

ஆன்மீக நூல்களிலும், சித்த மருத்துவ நூல்களிலும் மிக உயர்வாகவும், சகல இஷ்ட சித்திகளை கொடுப்பதாகவும் கூறப்படுவது மகத்துவம் பொருந்திய **இரசமணி** ஆகும். மணி, மந்திரம், அவிழ்தம் என வரிசைக்கிரமமாக மணிக்கு முதலிடம் அக்காலத்திலேயே கொடுத்துள்ளனர்.

முன்பே பாதரசம் திரவ வடிவமான ஓர் உலோகம் என அறிந்துள்ளோம். இத்தகைய திரவ வடிவ உலோகத்தை திட உலோகமாக ஆக்கிடும் முறைமையை இதுநாள் வரை எவரும் கண்டறியவில்லை.

இருந்தாலும் பண்டைய காலத்தில் வாழ்ந்த சித்தர் பெரு மக்கள் இந்த பாதரசத்தை திட உலோகமாக்கி அதனை உருட்டி, அவ்வுருண்டையினுள் துளையிட்டு மணிபோல் ஆக்கினர். மேலும் இதற்கு பல பஞ்சபூத சத்துக்களை மூலிகை வாயிலாக வும், முப்பூ போன்ற அற்புத சக்திகளாலும் வேகங்களைக் கொடுத்து, பஞ்சபூத மந்திரங்களை ஜெபம் செய்து அவற்றின் ஆளுகையை அம்மணியை பெற்றிடும் வல்லமையை சித்தர்கள் பெற்று இருந்தனர்.

இந்த இரச மணியைக் கொண்டு அஷ்டமா சித்திகளைச் செய்தனர். ஆகாய வெளிதனில் திரிந்தனர். உடலினை அழிவில்லா காயகற்பமாக மாற்றியதோடு இம்மணியைக் கொண்டு பலவிதமான காரிய சித்திகளையும் பெற்றனர்.

இதனால் வஸியம், மோஹணம், ஆகர்ஷணம் போன்ற பல வித நற்செயல்களைத் தாம் இருந்த இடத்தில் இருந்தே பெற்றனர். எனவே சித்தர்களின் சித்தத்தில் சிந்தித்தவை யாவற்றையும் இந்த இரசமணி கொடுத்து அருளியது என்றால் அது மிகையானது அல்ல.

ஆனாலும் இம்மணியைக் கட்டும் முறைமையை சித்தர்கள் பரிபாஷையாக தம் பாடல்களில் கூறி மறைத்து வைத்தனர். ஆன்மீக ஞானம், சித்தர் பெருமக்கள் அருள், பஞ்சபூத பஞ்சீகரண முறைகள், அண்ட பிண்ட தத்துவங்கள் என அனைத்தையும் கைவரப் பெற்ற சித்தர்களே இன்றும் இதனைச் செய்து வருகின்றனர்.

ஆனால் இவர்கள் செய்வதை பொய் எனவும், இரசமணி செய்தல் என்பது முடியாத ஒன்று எனவும், சித்தர் பெருமக்கள் கூறியருளிய இரசமணி வேறு எனவும் கூறிடுபவர்கள் இம்மணியைச் செய்திட பொறுமையும், முறைமையும் தெரிந் திடாதவர்களே ஆவர். இன்னும் சிலர் இரசவாதம் என கடை ரசங்களை வாங்கி, அதனை மணிகட்டி, அம்மணியைக் கொண்டு தங்கம் செய்ய முயற்சித்து பெரும் தோல்வியைச் சந்திக்கின்றனர். இதனால் தான் பொறுமையை இழந்து இரச மணி செய்தல் என்பது இயலாத ஒன்று அல்லது அவ்விஷயம் பொய்யானது என்ற முடிவுக்கும் வருகின்றனர்.

இரசத்தை அறிந்திட வேண்டும். அதுவும் இரசத்தை அறியும் முன்பாக அதனுடைய தத்துவத்தை தெரிந்து கொள்ள வேண்டும். பஞ்ச பூதங்களில் எதன் உதவி கொண்டு ரசத்தைக் கட்டிட இயலும் என்பதையும் அறிந்திட வேண்டும். பின் அப்பூதத்தின் பாஷாணம், சுண்ணம், மூலிகை, உலோகம், பற்பம் என இவைகளைக் கண்டுபிடித்திட வேண்டும். இவற்றிற்கு எல்லாம் காலமும், பொறுமையும், விவேகமும் அவசியமாகும்.

இரசக்கட்டு முறை அறிந்தவனே ஞானி. தத்துவம் அறிந்தவன, தரத்தில் தாழ்ந்த உலோகம் ஒன்றினை தரம் உயர்ந்த உலோகமாக மாற்றிடும் வல்லமையைப் பெற்றவன். வறுமையையும், நோயினையும் வெற்றி கொண்டவன், என்றும் இளமையாக இருப்பவன, கடவுளின் அருளைப் பெற்றவன, நவக்கிரகங்களையும் தன்வசப்படுத்தி தனக்கு அனுக்கிரகர்களாக மாற்றிடுபவன். அவன் தான் இரசவாதி.

இதன் காரணமாகவே பதினெட்டு சித்தர்களில் ஒருவரான யுகிமுனி,

*'இருந்து பார் சூதத்தை எவ்வண்ணத்தாலும்*
*இருக்கினவன் தேவனடா இருக்கமில்லை'*

என்றும், தாயுமானவர்,

*'வெந்தனலில் இரதம் வைத்து ஐந்து லோகத்தையும்*
*வேதித்து விற்றுண்ணலாம்'*

என்றும், கம்பநாட்டாழ்வார்,

*'ஆண்டகை தன் மோதிரம் அடுத்த பொருளெலாம்*
*தீண்டளவில் வேதிகை செய் தெய்வமணி கொல்லோ'.*

என்றும் பாடி வைத்தனர். இரசத்தை பாகப் படுத்திட வேண்டும். இவ்வாறு பாகப்படுத்தி கையாண்டால் நாம் அடையும் நன்மைகளும் பலவாகும்.

★ இரசத்தை மணியாகக் கட்டிட வேண்டும். இவ்வாறு கட்டிய மணியை உடம்பில் சாதாரணமாக அணிந்து கொள்வதால் களைப்பு என்பது ஒரு போதும் இராது. மேலும் விரைந்தும் நடக்கலாம்.

★ என்றும் இளமையாகவும் உற்சாகம் ஒருபோதும் குறையாமலும் இருந்திடலாம்.

★ இடுப்புப் பகுதியில் இரசமணியை அணிந்து கொள்ள, விந்து தம்பித்து, பெண் போகத்தை களைப்பு, இரைப்பு என ஏதும் இன்றி அனுபவிக்கலாம். மேலும் புணரும் அப்பெண்ணுடன் வெகுநேரம் புணர்ந்திடவும் செய்யலாம்.

★ இந்த இரசமணியை வாயுள் போட்டு அடக்கியபடி இருந்திட வேண்டும். இவ்வாறு அடக்குவதால் வாயுள் உமிழ்நீர் சுரந்திடும். இந்த உமிழ்நீரினை விழுங்கி வர உடம்பில் உள்ள நரை திரை என யாவும் நீங்கி உடல் பொலிவு பெற்று காயகற்பமாகிடும்.

★ பால் அருந்தும் குவளை போல் இரசத்தைப் பாகப் படுத்திட வேண்டும். இவ்வாறு பாகப்படுத்திய இரசக் குவளையில் பாலினை சூடாக ஊற்றி சிறிது நேரம் வைத்திருந்து அப்பாலினை அருந்தி வர உடல் நோய்களற்று என்றும் இளமையாய் தோன்றிடும்.

★ இரசமணியைக் கொண்டு தரம் தாழ்ந்த உலோகங் களை உயர்ந்த மாற்றுள்ள தங்கமாக ஆக்கிட இயலும்.

★ மாந்திரீகத்தால் உண்டான பில்லி, சூனியம், ஏவல் போன்றவற்றால் ஏற்படும் கெடுதல்களை நிவர்த்தி செய்து பாதுகாத்திடும் வல்லமை பெற்றது இந்த இரசமணியாகும்.

★ பருவ கால சீற்றங்கள், இடி, மின்னல் போன்றவற்றால் உண்டாகும் தீமைகளில் இருந்து உடம்பினைப் பாதுகாக்கும் சக்தியை உடைய இந்த இரசமணி கொடிய விலங்குகள், விஷ ஜந்துக்கள் ஆகியவற்றை அணுகிட விடாது.

திரவ வடிவில் உள்ள இரசத்தினைத் திரட்டி, மணியாகக் கட்டி பல சத்துக்களை புடம் போட்டுச் சேர்த்தும்,

மந்திரத்தாலும் கவுனக் குளிகையாக்கி அக்குளிகையைக் கொண்டு ஆகாயத்தில் திரிந்து சென்று பல அண்டங்களில் புகுந்திடவும் இயலும்.

அதுமட்டுமல்லாது இந்த இரசமணியைக் கொண்டு பலவகைகளில் சாரணைகள் செய்து உடலை தூல சூட்சும மாக மாற்றிடலாம். மேலும் இரச மணியைக் கொண்டு பற்பல அற்புதங்களையும் நிகழ்த்திடலாம்.

## 4. கொங்கணரின் இரசமணி

சித்தர் பெருமானாகிய கொங்கணர் அட்சய இரசமணியின் மகிமைதனை கீழ்வரும் பாடல் வாயிலாக விளக்குகிறார்.

*ஓடலாம் அட்சயமாம் ரசத்தைக் கேளு*
*உத்தமனே பதினொருக்கால் விடுவித்தாக்கால்*
*ஆடலாம் அட்டமா சித்தி எட்டும்*
*அணிமாவும் கரிமாவும் லகிமாவோடு*
*தேடலாம் மகிமாவும் பிரார்த்தியோடு*
*சேர்ந்த எட்டும் ஆடலாம் செப்பக் கேளு*
*நீடலாம் பூரணத்தில் சென்று புக்கி*
*நிலைக்கலாம் திரும்பலாம் நீங்கள் கேளே.*

என போற்றிப் புகழுகிறார். கொங்கணச் சித்தர் பத்து வகையான இரசமணிகள் பற்றிக் கூறுகிறார். அதில் அட்சய இரசமணியை பதினோரு முறை சாரணை செய்தால் அஷ்டமா சித்தி ஆடலாம் என்றும், பூரணம் என்ற மனம் ஒடுங்கிய மௌன நிலைகொண்டு சமாதி நிலை அடைந்து, இவ் வுடலை ஓரிடத்தில் நிறுத்தி மனதினை பரத்தோடு சேர்த்துத் தானும் பரமமாகும் நிலையை அடைந்தும், பின் அவ்வாறு அடைந்த பூரணநிலையில் இருந்து திரும்பவும் செய்திடலாம்

என்று இதன் அருமை பெருமைகளை அளவிட இயலாது எனவும் கூறுகிறார்.

இரசத்திற்கு மிகுதியான வீரியத்தை அளித்திடும் முறைகளையும் கொங்கணச் சித்தர் கையாளுகின்றார். பாஷாணத்தில் இருந்து இரசத்தைத் தயார் செய்து கொள்ள வும். பின் அந்த இரசத்தை நெருப்புக்கு ஓடாதவாறு பதங்கித்து ஜெயரசமாக்கிக் கொண்டு அதன் வீரியத்தை அதிமாக்கிடும் வழிமுறைதனையும் கூறி விளக்கிடுகிறார்.

காரம், வீரம் ஆகியவற்றைச் சேர்த்து சிப்பி செயநீர் விட்டு கல்வத்தில் வைத்து அரைத்திடவும். இவ்வாறு அரைத்து எடுத்த விழுதினை வில்லையாகத் தட்டிக் காய வைத்து பின் அதனை உருக்கிடவும். இவ்வாறு உருக்க இரசமாகிடும். இந்த இரசத்தோடு மேலும் காரம், வீரம் ஆகியவற்றைச் சேர்த்து கல்வத்தில் வைத்து மீண்டும் சிப்பிச் செயநீர் விட்டு அரைத்து, வில்லையாகத் தட்டிடவும். இவ்வாறு தட்டிய வில்லையை காயவைத்து மறுபடியும் உருக்கிடவும். இவ்வாறு உருக்கிய இரசத்தை மீண்டும் மீண்டும் எட்டுமுறை முன் கூறிய முறைப்படி செய்து உருக்க, ஒவ்வொரு முறை செய்து முடிக்கும் போதும் இரசத்தின் வீரியம் அதிகரித்து வரும்.

இவ்வாறு ஒவ்வொரு முறை உருக்கி எடுக்கும் இரசத்திற் கும் கொங்கணர் அதற்கென தனித்தனி பெயரினைச் சூட்டி அழைக்கவும் செய்கிறார்.

முதல் முறையில் உருக்கி எடுத்த இரசம் **சித்த இரசம்** எனவும், இரண்டாம் முறையில் **நவநீத இரசம்** எனவும், மூன்றாம் முறையில் **தொடுப்பு இரசம்** எனவும், நான்காம் முறையில் **சிராவண இரசம்** எனவும், ஐந்தாம் முறையில் **சுத்த இரசம்** எனவும், ஆறாம் முறையில் **நின்மல இரசம்** எனவும், ஏழாம் முறையில் **அட்சய இரசம்** எனவும், எட்டாம் முறையில்

இந்திர ரசம் அல்லது விந்தி இரசம் எனவும் பெயரிட்டு இந்த எட்டு வகை இரசங்களை அழைத்திடுகிறார்.

முன்கூறிய எட்டு வகைகளில் இறுதியாகக் கூறப்பட்ட நான்கு இரசங்களும் சாரணைகள் செய்து குளிகை செய்திட உதவும். முன்கூறப்பட்ட முதல் நான்கு இரசங்களும் செந்தூரம் செய்து தரம் தாழ்ந்த உலோகங்களை உயர்ந்த உலோகங்களாக ஆக்கும் இரச வாத வேலைக்குப் பயன்படுத்திடலாம் எனவும் கூறுகிறார்.

கொங்கணர் கூறிய முறைப்படி செய்து எடுத்த முதல் வேகத்தைப் பெற்ற சித்த இரசத்தைக் கொண்டு இரசமணி செய்தால் வேதைகள் பல புரியலாம். கவுணம் ஓடும். காய மான உடல் சித்தியாகும்.

இரண்டாம் வேகத்தைக் பெற்ற நவநீத இரசத்தினைக் கொண்டு இரசமணி செய்தால் உபரசரங்கள் பொன்னாக மாறும். உடல் பொலிவடைந்து மன்மதன் போலாகும்.

மூன்றாம் வேகம் பெற்ற இரசமான தொடுப்பு இரசத்தைக் கொண்டு பல வேதைகள் புரிந்திடலாம். பொன் நூற்றெட்டு மாற்று கிடைத்திடும்.

நான்காம் வேகம் பெற்ற சிராவண இரசத்தைக் கொண்டு முன்கூறியபடி பல வேதைகளைச் செய்திடலாம்.

ஐந்தாம் வேகத்தினைப் பெற்ற சுத்த இரசத்தை இரச மணியாக்கி நூறு சாரணைகள் செய்ய கவுனக் குளிகை ஆகும். இந்த ரசத்தைக் கொண்டு செந்தூரம் செய்து உபரசங்களையும், உலோகங்களையும் கொண்டு பற்பல வேதைகள் புரியலாம்.

ஆறாம் வேகத்தினைப் பெற்ற நின்மல இரசத்தை இரசமணியாக்கி இருநூற்று ஒரு முறை சாரணை தீர்த்திட மேரு முதல் ஆகாய வெளியில் திரிந்திடலாம். இவ்வாறே இம்மணியை ஆயிரத்து நூனூற்று ஏழு சாரணைகள் தீர்க்க

**கமலினி** என்னும் குளிகையாகும். இதனைக் கொண்டு கடல் நீரினையும் வற்றிடச் செய்யலாம். நெருப்பை உண்டாக்கலாம். காற்றினை வீசிடச் செய்யலாம். ஆயிரத்தெட்டு அண்டங் களிலும் பாய்ந்து சென்று சுற்றலாம். பஞ்ச பூதங்களை தமக்கு ஏவல் புரியச் செய்திடலாம்.

ஏழாம் வேகத்தைப் பெற்ற அட்சய இரசத்தை இரசமணி யாக்கி பதினோரு முறை சாரணை செய்ய அட்டமா சித்தி களும் கை கூடி வரும்.

எட்டாம் வேகத்தைப் பெற்ற இந்திர இரசம் என்கிற விந்தி இரசத்தை இரச மணியாக்கி இருபதினா யிரத்து நூறு முறை சாரணை செய்ய சொரூப குளிகையா கிடும். இக்குளிகையால் இஷ்டப்பட்ட உருவை எடுத் திடலாம். கூடு விட்டுக் கூடு பாய்ந்திடலாம். எதனையும் ஆக்கவும் அழிக்கவும் செய்திடலாம்.

முன்கூறிய யாவுமே கொங்கணச் சித்தர் பெருமான் அருளிச் செய்த வாத காவியத்தில் கூறப்பட்டவை ஆகும். அதுமட்டுமல்லாது இப்பெருமான் இவ்வகை இரசங்களைத் தயாரித்ததுடன் தமக்கு வேண்டிய மணிகளைச் செய்து பல வாறான இஷ்ட சித்திகளைப் பெற்றிருக்கிறார் என்பதையும் அவர்தம் வாழ்க்கை வரலாறு வாயிலாகவும் அறிய முடிகிறது.

இலங்கையின் வேந்தனாகிய இராவணன் கந்தகம் - பூநாகம் கலந்த செம்புக் கிண்ணியினால் இரசமணியைக் கட்டி நான்கு வகைச் சாதிப் பெண்களையும் தாம் விரும்பிய போது விரும்பியபடி புணர்ந்ததாக சித்தர்கள் நூல்கள் தெரிவிக் கின்றன.

## 5. காந்தக் கிண்ண இரசமணி

ஏழு ஊசிகளைப் பிடித்திடும் வல்லமையுடைய, நல்ல தரம் உடைய காந்தத்தைக் கொண்டு ஒரு கிண்ணம் செய் திடல் வேண்டும். பின் இந்த காந்தக் கிண்ணத்தில் சுத்தி

செய்த பாதரசம், வீரரசம், வாலை ரசம் போன்ற ஏதேனும் ஒரு ரசத்தை ஓரங்குல உயரத்திற்கு விட வேண்டும். பின் இக்கிண்ணியை கரி அடுப்பில் அல்லது அணல் ஓட்டினில் வைத்து ஒரு மணி நேரப் பொழுதுக்கு சூடு செய்ய, இரசத்தில் உள்ள நீரினை காந்தம் முற்றிலுமாக இழுத்து வெண் ணெயைப் போலாக்கிடும். இவ்வாறு வெண்ணெய்போலா கிய இரசத்தை வழித்து உருட்டி தக்க முறையில் மணியாக்கிக் கொள்ள வேண்டும். இவ்வாறு உருட்டி எடுத்த இரசமணியை, படிக்காரச் சுண்ணத்தில் நூறு முறை சாரணை கள் செய்தால் அஷ்டமா சித்திகள் கைவரப் பெறும். இம் மணியையே முப்பூச் சுண்ணத்தில் நூறு முறை சாரணைகள் செய்ய இரசவாதம் கைகூடும்.

இந்த இரசமணியை தங்கச் சுண்ணத்தில் நூறு முறை சாரணைகள் செய்ய கமனம் என்னும் ஆகாயத்தில் சஞ்சரிக்கும் சித்தியுண்டாகும்.

எனவே பல்வேறு சித்தர் பெருமக்கள் தத்தம் முறைகளில் இரசத்தை மணியாகக் கட்டியுள்ளனர். ஒவ்வொரு சித்தருக்கும் என தனித்தனி எளிய வழிமுறைகள் உண்டு. இம்முறை களைத் தெரியாது அதன் மகிமையை உணராது இரசமணிக்கு ஆசைப்பட்டால் ஏமாற்றம் மட்டுமே மிஞ்சிடும்.

தற்போது கடைகளில் விற்கப்படும் இரசம் வங்க இரசம் ஆகும். இந்த இரசம் வியாபார ரீதியாக மட்டுமே தயாரிக்கப் படுவது ஆகும். சித்த மருத்துவர்கள் பலர் இந்த இரசத்தில் காரீயம் மற்றும் வெள்ளீயம் கலப்பு அதிகமாக உள்ளதாகக் கருதுகின்றனர். ஆகவே இந்த இரசத்தை வாங்கி இரசமணி யாகக் கட்டுவதால் யாதொரு பயனும் உண்டாகாது.

இந்த இரசம் குற்றம் உள்ளதும், களிம்பு நீங்காததும் ஆகும் என்பதால் இது மணி கட்டிடவோ அல்லது மருந்து செய்திடவோ பயன்படாது என்பதை அறிந்திடவும்.

ஆகையால் தான் கடைச் சரக்காகிய இந்த இரசத்தை வாங்கி மணி கட்ட முயற்சித்து தோல்வியுற்று சித்தியடையாது இரசவாதத்தையே பொய் எனக் கூறும் இரசவாதிகளும், மருத்துவர்களும் நிறையபேர் இன்றைய தினம் உள்ளனர்.

# 6. இரசம் தயாரிப்பு முறை மற்றும் இரசத்தின் வகைகள்

**தயாரிப்பு முறை:**

பிறவிப் பாஷாணமாகிய லிங்கத்திலோ அல்லது வீரம் என்னும் பாஷாணத்திலோ அல்லது உயர்ந்த பிறவிக் காந்தமான, ஏழு ஊசிகளைப் பிடிக்கும் வல்லமையுடைய காந்தத்தினாலோ இரசத்தினைத் தயார் செய்திட வேண்டும். இரசத்தை பதங்கப்படுத்துதல், அல்லது வேறு முறைகளில் பாகப்படுத்துதல் வாயிலாக இரசத்தை சுத்தி செய்திடல் வேண்டும். இவ்வாறு இரசத்தை சுத்தி செய்ய அதற்குள்ள எட்டு வித தோஷங்களும், ஏழு வித சட்டைகளும் நீங்கிடும். இவ்வாறு சுத்தி செய்த இரசத்தைக் கொண்டு மணியைக் கட்ட, சித்திகள் பல கைகூடும்.

**இரச வகைகள் :**

போக முனிவர் தனது இரண்டாம் காண்டத்தில் இரசத்தின் வகைகளைத் தம் பாடல் வாயிலாகக் கூறுகிறார்.

*ஆறியே சூதம் ஐந்து விதமாகும்*
*அதன் விவரம் ஏதென்னில் அரையக் கேளு*
*ஊறியே ரசம் என்றும் இராசேந்திரம் என்றும்*
*உற்ற பாரதம் என்றும் சூதம் என்றும்*
*மீறியே மிசரசம் என்று ஐந்துமாச்சு*

என இரசவகைகளை வரிசையிட்டுக் கூறுகிறார். பஞ்ச பூதக் கூட்டுறவு காரணமாக இந்த இரசம் உற்பத்தி ஆகிறது. எந்த ஒரு பூதத்தின் இயல்பினையும், குணத்தையும் இரசமானது அதிகமாகப் பெற்றுள்ளதோ அதற்கு ஏற்ப இரசம் ஐந்து வகையாகப் பிரிக்கப்படுகிறது.

**இரசம்** : கடைகளில் விற்கப்படும் இரசத்தையே பொதுவாக இரசம் எனக் கூறுகின்றனர். ஆனால் இங்கு கூறி விளக்கப்படும் இரசமானது சிறப்பானதும், செந்நிறம் கொண்டதும் ஆகும். அதுமட்டுமல்லாது சுத்தமானதும் ஆகும். வங்கம் கலப்பு இல்லாததான குற்றமில்லா இரசத்தையே குறிப்பதும் ஆகும். தற்போது இவ்வகை இரசம் இயற்கையாகக் கிடைப்பது அரிது என்பதால் இதனை செயற்கை முறையில் செய்யும் முறைகளை சித்த மருத்துவ நூல்கள் விளக்குகின்றன.

**இராசேந்திரம்** : இவ்வகை இரசம் கருமை நிறம் கொண்டது ஆகும். இந்த இரசம் தன் குணம் மற்றும் தன்மையில் செந்நிற இரசத்திற்கு நிகரானது ஆகும்.

**சூதம்** : மஞ்சள் நிறமுடைய சூதம் அதிக தோஷம் கொண்டது ஆகும். எனவே இதனை முறையாகச் சுத்தி செய்து பயன்படுத்த வேண்டியது மிகவும் அவசியமாகும்.

**மிசரசம்** : பல நிறம் கொண்ட இதனையும் பல்வேறு முறைகளில் சுத்தி செய்து பயன்படுத்திட வேண்டும்.

**பாரதம்** : தற்காலத்தில் கடைகளில் விற்கப்படும் இது வெண்மை நிறம் கொண்டதாக இருக்கும். இதனை பாத

இரசம் எனவும் கூறுவர். இதிலும் பலவகை தோஷங்கள் இருப்பதால் இதனையும் முறைப்படி சுத்தி செய்தே பயன்படுத்திட வேண்டும்.

காய கற்ப செந்தூரம் தீராத கொடும் வியாதிகளுக்கு செய்யப்படும் அருமருந்தாகும். இரசத்தில் உள்ள எண்வகை தோஷங்களையும் போக்கிடா விட்டால் இரசமானது அதற்கான பலனை அளித்திடாது என்பதை அறிந்திட வேண்டும். இவ்வாறு தோஷம் நீக்கிடாத இரசத்தைக் கொண்டு செய்யும் எந்த மருந்தாக இருந்தாலும் அது வைத்தியத்திற்கான பலனை முற்றிலுமாக அளித்திடாது என்பதையும் அறிந்திடுதல் அவசியம் ஆகும். இம்மருந்துகள் நோய்களை நீக்கிடவும் செய்யாது. மேலும் உடலுக்குப் பெருங் கேடுகளையும் விளைவித்திடும்.

## 7. இரசத்தின் எண்வகைத் தோஷங்கள், நீக்கும் முறைகள்

### தோஷங்கள் :

பொதுவாக இரசத்தில் எட்டுவித தோஷங்கள் உள்ளன. அவைகள் நாக தோஷம், வங்க தோஷம், மலதோஷம், வன்னி தோஷம், சாஞ்சல தோஷம், விஷ தோஷம், கிரி தோஷம், அசக்யாக்னி தோஷம் என்பனவாகும்.

இவற்றில் மூலநோயினை உண்டாக்குவது நாகதோஷம் ஆகும். பெருநோய் என்றும் தொழுநோய் என்றும் கூறப்படும் குஷ்டத்தினை உண்டாக்குவது வங்க தோஷம் ஆகும். மூர்ச்சையை அளிப்பது மலதோஷம் ஆகும். நாவறட்சியை அளிப்பது வன்னி தோஷம் ஆகும். மரணத்தை அளிப்பது விஷதோஷம் ஆகும். தாது விரையத்தை அளிப்பது சாஞ்சல்ய

தோஷமாகும். சொறிசிரங்கினை உண்டாக்குவது கிரிதோஷம் ஆகும். மேக நோயை உருவாக்குவது அகக்யாக்னி தோஷம் ஆகும்.

இவ்வாறு பலவித நோய்களையும், உபாதைகளயும் அளித்திடும் எட்டுவகை தோஷங்களைப் போக்கும் வழி முறைகளையும் சித்தர் பெருமக்கள் கூறியருளியுள்ளனர்.

பாத இரசத்தின் எடைக்கு பதினாறு பங்கு செங்கல் தூள், மஞ்சள் தூள் ஆகியவற்றை எடுத்துக் கொள்ளவும். பின் இவற்றை பாத இரசத்துடன் ஒவ்வொன்றாகக் கலந்து கல்வத்திலிட்டு எலுமிச்சம் பழச்சாறு விட்டு ஒரு நாள் பொழுது முடிய அரைத்திடவும். பின் இதனைக் கழுவி எடுக்க பாத இரசத்தின் நாக தோஷமானது நீங்கிடும்.

அழிஞ்சி வேர், கடம்பு ஆகியவற்றை பாத இரசத்துடன் சேர்த்துக் கல்வத்தில் இட்டு எலுமிச்சம்பழச் சாறுவிட்டு நாள் முழுதுமாக அரைத்துக் காடி நீரினால் கழுவி எடுக்க வங்க தோஷமானது பாத இரசத்தில் இருந்து நீங்கிடும்.

இலந்தை வேரினை எடுத்து வந்து சுத்தம் செய்து பாத இரசத்துடன் சேர்த்துக் கல்வத்திலிட்டு எலுமிச்சம் பழச்சாறு விட்டு நாள் முழுவதுமாக அரைத்து எடுத்து காடிநீர் கொண்டு கழுவ பாத இரசத்தின் மலதோஷமானது நீங்கிடும்

சித்திர மூலத்தின் பட்டையை எடுத்து பாத இரசத்துடன் சேர்த்து கல்வத்திலிட்டு ஒரு நாள் முழுவதுமாக எலுமிச்சம் பழச்சாறு விட்டு அரைத்து காடி நீர் கொண்டு கழுவ வன்னி தோஷம் நீங்கும்.

கருவூமத்தை வேரினை எடுத்து வந்து சுத்தம் செய்து பாத இரசத்துடன் சேர்த்து கல்வத்திலிட்டு நாள் முழுவதுமாக அரைத்து காடி நீர் கொண்டு கழுவ சாஞ்சல்ய தோஷமானது நீங்கிடும்.

திரிபலை என்னும் கடுக்காய்த்தோல், நெல்லி வற்றல், தான்றிக்காய்த் தோல் ஆகியவற்றின் சூரணத்தை பாத

இரசத்துடன் சேர்த்து கல்வத்திலிட்டு எலுமிச்சம் பழச்சாறு விட்டு நாள் முழுவதுமாக அரைத்து காடி நீரினால் கழுவிட விஷ தோஷம் பாத இரசத்தில் இருந்து நீங்கும்.

திரிகடுகு என்னும் சுக்கு, மிளகு, திப்பிலி ஆகியவற்றின் சூரணத்தை பாத இரசத்துடன் சேர்த்துக் கல்வித்திலிட்டு நாள் முழுவதுமாக எலுமிச்சம் பழச்சாறு விட்டு அரைத்து எடுத்து காடி நீர் கொண்டு கழுவிட பாத இரசத்தின் கிரி தோஷம் நீங்கிடும்.

நெருஞ்சிச் சூரணத்துடன் பாத இரசத்தைச் சேர்த்துக் கல்வத்திலிட்டு நாள் முழுவதுமாக எலுமிச்சம் பழச்சாறு விட்டு அரைத்துக் காடிநீர் கொண்டு கழுவ பாத இரசத்தின் அசக்யாக்னி தோஷம் நீங்கும் என சித்தர் பெருமக்கள் கூறியருளியுள்ளனர்.

இந்த எட்டு வகை தோஷங்கள் மட்டுமல்லாது பாத இரசத்தில் ஏழு வகையான சட்டைகளும் உண்டு. அவை நாக சட்டை, வங்க சட்டை, மல சட்டை, அக்னி சட்டை, விஷ சட்டை, கிரி சட்டை, சபல சட்டை ஆகியவை ஆகும்.

முன்கூறிய எட்டுவகை தோஷங்கள் மட்டுமல்லாது இந்த ஏழுவகை சட்டைகளையும் பாத இரசத்தில் இருந்து நீக்கிட வேண்டும். இவ்வாறு நீக்கிடாவிட்டால் குற்றங்களுடைய அப்பாத இரசம் கொண்டு இரசவாதம் செய்திட இயலாது.

## 8. இரசத்தின் ஏழுவகை சட்டைகள் நீக்கும் முறை

சட்டை நீக்கப்படாத பாத இரசத்தின் எடைக்கு நிகராக குமரிப்பூச் சாறு, கல்லுப்பு ஆகியவற்றைச் சேர்த்துக் கல்வத்தில் ஒன்றாக இட்டு மூன்று நாட்கள் தொடர்ந்து கைமாறாது அரைத்து எடுத்து காடி நீர் கொண்டு கழுவிட பாத இரசத்தின் ஏழு வகையான சட்டைகளும் நீங்கி சுத்தமாகிடும்.

இவ்வாறு இந்த ஏழுவகை சட்டைகளையும் பாத இரசத்தில் இருந்து நீக்காவிட்டால், அதனைக் கொண்டு செய்யும் மருந்துகளால் மூலநோய், குஷ்டம், அறிவின்மை, மரணம், தாகமோகம், வீரிய நாசம் போன்றவை உண்டாகி உடலைக் கெடுத்து அவதிக்கும் உள்ளாக்கிடும்.

முன் கூறிய சட்டை நீக்கும் முறையை திருமூலர் தம் பாடலில்,

*ஏதுவாய் நின்ற எழிலான சூதத்தில்*
*கோதுவாய் நின்ற குடிலமயல் ஏழுமே*
*கேதுவாய் போகாட்டால் கெவனமெடுக்காது*
*வாதுவாம் வாதத்துக்கு ஆகாதாதே.*

என்று கூறுகிறார். அது மட்டுமல்லாது எண் வகை தோஷங்களை போக்கும் முறையையும் தம் பாடலில்,

*ஆகாத கன்மசம் அகற்ற முறைகேளு*
*வாகான கல்லுப்பு மாட்டு சமபாகம்*
*தாகான குமரிப்பூச் சாறு ஒரு மூன்றுநாள்*
*பாகாய்க் கழுவி பதனமாய் வாங்கிடே.*

என முன்கூறிய முறையையே கூறியுள்ளார்.

## 9. இரசவாதக் குறிப்புகள்

ஒரு கலப்புச் சரக்கை இத்தனை நாள் வைத்திருக்க அது நீராகும் - இத்தனை முறை புடம் போட ஒரு பொருள் பற்பம் ஆகிடும் என சில நூல்களில் கூறப்பட்டு இருக்கும். கூடிய மட்டும் அந்நூல்களில் கூறியபடியே நடக்கவும் கூடும். சில நேரங்களில் அம்மாதிரி நடக்காமலும் போகக் கூடும். இதற்குக் காரணம் அந்நூலில் கூறப்பட்ட வழிமுறைகள் என நினைத்தால்

அது தவறு. நாம் சேர்த்து இருக்கும் சரக்குகள் அல்லது செய் முறைகளில் ஏதேனும் குறை இருக்கலாம். இவ்வாறு சில குற்றம் குறைகள் இருந்தாலும், அக்குறை எந்த இடத்தில் ஏற்பட்டது என்பதைக் கண்டறிந்து முயற்சி செய்து மீண்டும் செய்திட நாம் செய்ய நினைத்ததை உறுதிபட செய்து முடிக்க முடியும்.

கந்தகம், தாளகம் போன்ற சரக்குகளை மீண்டும் மீண்டும் பதங்கம் செய்வதால் அப்பதங்கமே வேறு பல உலோகங் களுக்கு நிறம் ஏற்றிட தகுதியானதாகிடும். சாறு எடுக்கப் பயன் படும் எந்த ஒரு பச்சிலையையும், சாறு எடுக்கும் முன்பாக நன்றாகக் கழுவி சுத்தம் செய்து கொள்ளுதல் அவசியம். இவ்வாறு கழுவிச் சுத்தம் செய்திடும் போது, மூலிகையின் மேல் படிந்து இருக்கும் நீர் முற்றிலுமாக வடிந்து பின்னரே மூலிகையில் இருந்து சாறு எடுக்க முயற்சி செய்திட வேண்டும்.

இதுபோன்றே சாறுவிட்டு அரைத்திடும்போது அனைத்து சாறினையும் ஒட்டு மொத்தமாக நாம் அரைக்கும் சரக்கின் மீது விட்டு விடுதல் கூடாது. எச்சரக்கை அரைத்திடுகிறோமோ அதன் அளவுக்குத் தக்கபடி சாறுவிட்டு அரைத்து கெட்டி யானதும் மீண்டும் சிறிதளவு விடவேண்டும்.

சரக்கினைக் கல்வத்தில் விட்டு அரைத்து அதனை வில்லைகளாகச் செய்யும்போது எல்லா வில்லைகளும் சம கனமானதாக இருத்தல் அவசியம். அவ்வாறு சம கனமானதாக இருக்குமானால்தான் அவற்றைக் காயப்போடும்போது வில்லை சம அளவில் காய்ச்சல் பெற்று இருக்கும். இதே போன்று புடமிடும் போது தட்டி உலரவைத்த வில்லைகளை. இடைவெளி விட்டு வைத்தலும் அவசியமாகும்.

ஒரு பொருளினை ஊற வைக்கும்போது அப்பொருள் வைக்கும் பாத்திரத்தில் அப்பொருளின் உயரத்திற்கு மேல் சற்று கூடுதலாக நீர் அல்லது திரவம் இருத்தல் வேண்டும். அதே போன்று நான்கு நாட்களுக்கு அப்பொருள் ஊறிட

வேண்டும் என விதி இருக்குமாயின் அந்நான்கு நாட்கள் வரையில் சாறு முதலில் ஊற்றும் போது எந்த அளவில் இருந்ததோ அதுவரை சாறு இருக்குமாறு பார்த்துக் கொள்ள வேண்டும். இதற்கு ஒவ்வொரு நாளும் சாறின் உயரம் எந்த அளவு குறைந்து இருக்கிறதோ அந்த அளவுக்குப் புதிதாகச் சாறினையும் விடுதல் அவசியமாகும்.

புடமிடும் அகலில் வில்லையை வைத்திடும் போது சில உப்புகள் அல்லது மூலிகைப் பொடியை வைத்திட வேண்டியிருக்கும். அவ்வாறு வைக்கும் சமயத்தில் மொத்த உப்பை அல்லது மூலிகைப் பொடியை போடுதல் கூடாது. மொத்த உப்பு அல்லது மூலிகைப் பொடியில் பாதியளவு கீழ் அகலில் தூவி அதன்மீது புடம் போடப்படவேண்டிய பொருளினை வைத்து மீதமிருக்கும் பொடி அல்லது உப்பினை அப்பொருளின் மீது தூவி மேல் அகலைக் கொண்டு மூட வேண்டும். மேலும் புடமிடப் பயன்படுத்தும் சட்டி அல்லது அகல் எதுவாக இருந்தாலும் அதனை நன்றாகக் கழுவி சுத்தம் செய்து உலரவைத்தே பயன்படுத்த வேண்டும்.

இதேபோன்று ஒரு புடம் போட்டபின், மறுபுடம் போடும் சமயத்தில் கீழ் அகலை மேல் அகலாகவும், மேல் அகலினை கீழ் அகலாகவும் மாற்றிப் புடமிடப் பயன்படுத்துவது மிகவும் சிறந்தது.

புடமிடுதலில் சீலைமண் செய்தல் என்பது முக்கிய பங்கினை வகிக்கும். இவ்வாறு சீலைமண் செய்ய மெல்லிய துணிகளையே உபயோகித்தல் வேண்டும். பெரும்பாலும் வெள்ளை நிறத் துணிகளையே சீலைமண் செய்திட உபயோகித்தல் மிகவும் நல்லது. பிற சாயத்துணிகளை சீலைமண் செய்ய உபயோகித்தால், அத்துணிகளில் உள்ள சாயம்

புடமிடும் அகலுக்குள் கசிந்து உள்ளிருக்கும் சரக்குகளின் தன்மையையே மாற்றி விடக் கூடும்.

மேலும் சீலைத் துணியில் தடவ வேண்டிய களிமண்ணை நன்றாகக் குழைத்துக் கொண்டு அதில் உள்ள கல், மணல் போன்றவற்றையும் நீக்கிட வேண்டும். இவ்வாறு சீலைமண் செய்ய குழைத்திடும் களிமண் கூடியவரை சாறுபதத்தில் இருந்தால் மிகவும் நல்லது.

சில புடமிடும் முறைகளில் ஒன்றுக்கு மேற்பட்டு சீலை மண் செய்ய வேண்டியிருக்கும். அச்சமயத்தில் முதல் சீலை மண் செய்த துணி முற்றிலுமாகக் காய்ந்த பின்னரே மறு சீலை மண் செய்து சுற்றிட வேண்டும். இவ்வாறு செய்ய உள்ளிருக்கும் சரக்குப் புடமானது எண்ணியபடி வெந்து நீறிடும்.

புடமிடும் முன்பு ஒன்றுக்கு மேற்பட்ட பொடிகள் கீழேயுள்ள வரிசை அடுக்குப்படி, மேலே உள்ள வரிசை அடுக்கு தலைகீழாக இருத்தல் அவசியம். இவ்வாறு வைத்து முடித்த பின்னரே பொடிகள் வைத்த கீழ் அகலினை, மேல் அகலால் மூடிட வேண்டும்.

ஒரு சில நேரங்களில் மூசை அல்லது அகலில் குறிப்பட்ட சாறினைத் தடவி அதன்பின்னரே பொடிகளைப் போட்டு புடம் போடுமாறு குறிப்பிடப்பட்டு இருக்கும். அம்மாதிரி சமயங் களில் குறிப்பிட்ட அந்த சாறினை அதல் அல்லது மூசையின் உட்பகுதியில் தடவி நன்றாகக் காய்ந்த பின்தான் உபயோகித் தல் வேண்டும். இவ்வாறு காயவைத்திடும் போது தடவி இருக்கும் மூலிகைச் சாறில் எந்தத் தூசும் அல்லது அழுக்கும் படாமல் இருக்குமாறு பார்த்துக் கொள்ள வேண்டும்.

ஒரு பொருளை அதாவது சரக்கினை அரைத்திடும் போது நேராகவும் சீராகவும் அதே சமயம் அழுத்தமாகவும் அரைத்திட

வேண்டும். அந்தப் பொருள் அல்லது சரக்கை குறிப்பிட்ட நாட்கள் அரைத்திட வேண்டும் எனக் கூறப்பட்டு இருக்குமானால் சோம்பாமல் கூறப்பட்ட மொத்த நாட்களும் பகல் பொழுதில் கைமாறாது அரைத்திட வேண்டும்.

சில நேரங்களில் புடமிட குழி தோண்ட வேண்டி இருக்கும். அவ்வாறு குழிதோண்டும் இடம் ஈரப்பதம் இல்லாத இடமாகவும் காற்று புக இயலாத இடமாகவும் இருத்தல் வேண்டும். இவ்வாறான இடத்தில் குழி தோண்டிய' பிறகுதான் அக்குழியில் எருவில் ஒரு பகுதியை முறையாக அடுக்கி அதன் மீது புடமிட வேண்டிய சீலைமண் செய்த அகலினை அல்லது சட்டியை வைத்திட வேண்டும். பின் அந்த அகல் அல்லது சட்டியைச் சுற்றிலும் ஒரு பகுதியை எருக்களை அடுக்கி மீதமுள்ள எருக்களை புடமிடும் அகல் அல்லது சட்டியின் மீதாக அடுக்கி நெருப்பிட வேண்டும்.

இவ்வாறு புடமிட்டு முடிந்ததும், புடத்தை நன்றாக ஆறவிடவேண்டும். புடம் தானாக ஆறி சூடு முற்றிலுமாக தணிந்ததும் சட்டியை வெளியே எடுத்து செய்த சீலை மண்ணைப் பிரித்து எடுத்து சட்டியைத் திறக்க வேண்டும். மேலும் அடுப்பில் வைத்து சில சமயம் புடமிடவேண்டி இருக்கும். அம்மாதிரி சமயத்தில் அடுப்பில் தீ எரிக்கும் போது ஒரே சீராக எரித்திட வேண்டும். கனமாகவும், லேசாகவும் இல்லாமல் ஒரே மாதிரியாக விறகுகள் இருந்தால் மட்டுமே தீயை சீராக எரிக்க இயலும். அதே சமயத்தில் காற்று, மழை போன்றவற்றால் எரிக்கப்படும் தீயானது எந்தவிதத்திலும் அணைந்து போகாமலும் பார்த்துக் கொள்வதும் அவசியமாகும்.

கந்தகத்தை கல்வத்தில் இட்டு அரைத்தால் அக்கந்தகம் புகைந்து ஓடிப்போகும். எனவே இத்தகைய பொருட்களை அரைக்கும் - போது கைவிடாது தொடர்ந்து அரைத்திட

3 வேண்டும். ஆனால் வெள்ளி, அயம் போன்ற பொருள்களை

அரைக்கும் போது சமயத்திற்கு ஏற்ப கால இடைவெளி விட்டு அரைத்திடல் வேண்டும். அதுமட்டுமல்லாது பொருள்கள் மற்றும் கடைச்சரக்குகளை அரைக்க உபயோகப்படும் கல்வத்தை சமதளமான இடத்தில் வைத்திட வேண்டும். இவ்வாறு இருந்தால்தான் கல்வம் ஆடாது அசையாது இருக்கும்.

உலோகங்களை சிலநேரங்களில் உருக்கிட வேண்டி இருக்கும். இம்மாதிரி உருக்கும்போது மூசை, குகை, அல்லது குறடுகளைக் கொண்டு பிடிக்கவும், எடுக்கவும் செய்ய வேண்டி இருக்கும். இவ்வாறு உருக்கிய உலோகத்தினை சாய்த்திட மூலிகைச்சாறு அல்லது எண்ணெய் போன்றவற்றை உபயோகிப்பர். இவ்வாறு உபயோகிக்கும் மூலிகைச் சாறு அல்லது எண்ணெயின் அளவானது உருக்கிய உலோகம் சாய்த்ததும் கெட்டியானதும் பின்பும் மூழ்குமாறு இருத்தல் அவசியமாகும். இவ்வாறு உருக்கிய உலோகத்தைச் சாய்த்திடும் நேரத்தில் எதில் சாய்த்திடுகிறோமோ அந்த எண்ணெய் அல்லது மூலிகைச்சாறும் சூடாகிப்போகும். எனவே அடுத்து உலோகம் உருக்கிச் சாய்க்கும்போது புதிய எண்ணெய் அல்லது புதிய மூலிகைச் சாறினைப் பயன்படுத்துதலும் கவனிக்கப்பட வேண்டிய ஒன்றாகும்.

கடுக்காய், சுக்கு போன்றவற்றை கடைச் சரக்குகளுடன் சேர்க்கும்போது உள்ளபடியே சேர்த்திடுதல் கூடாது. கடுக்காயின் உள்ளிருக்கும் கொட்டையை நீக்கிவிட்டு அதன் தோலினை மட்டும் எடுத்து நன்றாக உலர்த்தி கல்வத்தில் வைத்து இடித்து சலிக்காது நெய் தோய்த்து சேர்த்திடவும். சுக்கினை சேர்க்கும் போது சுக்கை சுத்தப்படுத்திக் கொள்ளவும். பின் அதன் மேல் தோலினை முழுமையாக கத்தியைக் கொண்டு சீவி அப்புறப் படுத்தவும். பின் தோல் சீவிய சுக்கினைக் கல்லுரலில் போட்டு இடித்து சலித்து பின் சேர்த்துக் கொள்வது மிகவும் நல்லது.

மேலும் இரசவாதம் போன்றவற்றைச் செய்திடும் போது துவக்கத்திலேயே அவ்வேலைக்கான அகல், சட்டி, பாத்திரம், சட்டி, மூலிகை போன்றவற்றை ஒன்றுக்கு மேற்பட்டு தயாராக வைத்துக் கொள்வதும் அவசியம். காரணம் எதேச்சை யாக அகல், சட்டி போன்றவையோ அல்லது வேறு ஏதேனும் உபகரணமோ சேதாரம் அடையக்கூடிய சந்தர்ப்பம் உருவாக லாம். அச்சமயத்தில் உடைந்த பாத்திரம் அல்லது வேறு உபகரணத்தை அப்புறப்படுத்திவிட்டு புதியதை எடுத்து உபயோகித்துக் கொள்ளலாம்.

மேலும் இரசவாதம் போன்றவற்றைச் செய்திடும் போது செய்யப்படும் இடம் வெகு சுத்தமாக இருத்தல் அவசியமாகும். அதே போன்று வேலை முடிந்ததும் அவ்விடத்தை முன் போன்றே வெகு சுத்தமாக வைத்துக் கொள்வதும் அவசியமாகும்.

ஒரு செய்முறைக்கு போதுமான அளவு குறிப்பிட்ட மூலிகை கிடைக்காமல் போகலாம். அதற்காக அச்செய் முறையை நிறுத்திடாது அம்மூலிகையின் குணத்தைக் கொண்டு இருக்கும் வேறு மூலிகையையும் உபயோகித்துக் கொள்ளலாம். ஆனால் மூலிகை போதுமான அளவு கிடைக்க வில்லை என்பதால் அதனுடன் அதே குணம் கொண்ட வேறு மூலிகையை தேவையான அளவு சேர்த்துக் கொள்வதும் கூடாது. எதுவானாலும் ஒரே மூலிகையைத்தான் பயன்படுத்த வேண்டும்.

பனிக்காலங்களில் மட்டுமே பனிநீர் கிடைத்திடும். இவ்வாறு பனிநீர் கிடைக்கும் காலங்களில் அப்பனி நீரினை குப்பிகளில் சேகரித்து வைத்துக் கொண்டு அதனை தேவைப் படும் சமயத்தில் உபயோகித்திடலாம். இவ்வாறு பனிநீரினை சேகரிக்க இயலாது போனால் ஐஸ் ஃபேக்டரிகளில் கிடைத்

திடும் ஐஸ் பார்களை வாங்கி வந்து உடைத்து தண்ணீராக்கி பின் அத்தண்ணீரினை வடித்து உபயோகப்படுத்திடலாம்.

சிலவகை செய்முறைகளில் பழரசம் எனக் கூறப்பட்டு இருக்கும். பழரசம் என்றால் அது என்னவோ ஏதோ என திகைத் திட அவசியம் இல்லை. எலுமிச்சம் பழச்சாறினையே பழச்சாறு என்று கூறிடுவர்.

சிலவகை மூலிகைகள் பார்வைக்கு ஒரே மாதிரியாகத் தோன்றும். ஆனால் அவை குணத்தால் வேறுபட்டு இருக்கும். ஆகவே பச்சிலை மூலிகைகள் ஒவ்வொன்றின் தோற்றம் மட்டுமல்லாது அவற்றின் குணங்களையும் முழுமையாக அறிந்து இருப்பது நல்லது. மேலும் சில மூலிகைகளின் பெயர்களும் ஒன்றுபோல் இருந்தாலும், அவை பார்வைக்கு வேறுவேறு தோற்றமுடனும் மாறுபட்ட குணங்களுடனும் இருந்திடும். எனவே பச்சிலை மூலிகை பற்றிய அனுபவ அறிவு மிகவும் அவசியம்.

இக்குறிப்புகள் அனைத்தையுமே இரசவாதம் செய்வோர் முற்றிலுமாக தெரிந்து இருத்தல் நல்லது. இவற்றில் சிறிதளவு கவனக் குறைவு உண்டானாலும் செய்முறை தப்பிப்போகும் என்பதையும் கவனித்துக் கொள்ளவும்.

## 10. இரசவாதம் - பிற உலோகங்கள் ஆகியவற்றுக்கு சம்பந்தம் உண்டாகும் போது ஏற்படும் மாற்றங்கள்

★ இரசத்தின் தோஷம் மற்றும் சட்டைகள் நீக்கப்பட்ட செந்நிறமுடைய குற்றமில்லாத இரசமும், கந்தகமும் சம அளவில் சேரும்போது தங்கம் உண்டாகும்.

★ தோஷங்கள் மற்றும் சட்டைகள் நீக்கப்படாத இரசமும் குற்றமுள்ள கெந்தகமும் சம அளவாகச் சேரும்போது செம்பு என அழைக்கப்படும் தாம்பரம் கிடைத்திடும்.

★ தோஷங்கள் மற்றும் சட்டைகள் நீக்கப்படாத இரசம் சிறு அளவாகவும், சுத்தி செய்யப்படாத கெந்தகம் பெருமளவில் சேரும்போது அயம் என அழைக்கப் படும் இரும்பு கிடைத்திடும்.

★ தோஷங்கள் மற்றும் சட்டைகள் நீக்கப்படாத இரசம் பெருமளவிலும், சுத்தி செய்யப்படாத கெந்தகம் சிறு அளவிலும் சேரும்போது வெள்ளீயம் உண்டாகும்.

★ குற்றமுள்ள இரசம் அதிக அளவிலும், அதைவிட குற்றம் உள்ள கெந்தகம் குறைந்த அளவிலும் சேர்ந்திட காரீயம் உண்டாகும்.

★ குற்றமுள்ள இரசமும், அதைவிட அதிகமாக குற்ற முடைய கெந்தகமும் சேர்ந்திட நாகம் உண்டாகும்.

★ தோஷங்களும், சட்டைகளும் நீக்கப்பட்ட இரசமும், தாளகமும் சம அளவில் சேர்ந்தால் வெள்ளி உண்டாகும்.

இக்காரணங்களால்தான் முற்காலத்தில் சித்தர் பெரு மக்கள் இரசத்தை வைத்தியத்திற்கும், இரச வாதத்திற்கும் பயன்படுத்தி வந்தனர். தேரையர் தன்னுடைய காப்பிய நூலில் இரசமணியைக் குரு குளிகை என்றும் இதனைக் கொண்டு வாதத் தொழிலில் தங்கம் போன்றவற்றையும், குளிகையாக்கி, அக்குளிகையைக் கொண்டு காரியசித்தி, அட்டாங்கம், மகிமா, லகிமா, கவுனம் ஆகியவை சித்தியாக்கிக் கொள்ளலாம் என உரைக்கின்றார்.

எனவே அறுபத்து நான்கு சித்திகளையும் அளிக்க வல்லது சூதமே ஆகும். இது ஒன்றே தீயினை வென்று நின்றிடும். கட்டுப்படும். குளிகையாகிடும். பின் சாரணை தீர்த்து

வேண்டிய சித்தியை ஒருவன் பெற்றிடவும் காரணமாக அமையும். ஆகவே இரசம் மானிடர்க்கு ஒரு வரப்பிரசாதம் என்றால் அது மிகையல்ல. இதனை முற்றிலுமாக அறிந்து இரசத்தை நெருப்பிற்கு புகைந்து ஓடாது, கட்டி, சாரணை தீர்த்து, மணியாக்கிடத் தெரிந்தவனே சித்தன் ஆவான்.

இரசமணி ஒருவனுக்குக் கிடைக்கப் பெற்றால், அவனுக்கு சித்தர்களின் பேரருள் கிட்டுவதோடு மெய்ஞ் ஞானம் பெறுவதற்கான அறிகுறியும் ஆகும்.

தேரையர் புலத்தியனாகிய தன் மாணாக்கனுக்கு தட்சிணா மூர்த்தி பூஜையில் வைத்து, தேவதா சித்தி பெற்றிடவும், இஷ்ட தெய்வத்தின் சித்திகளைப் பெற்றிடவும் ஒரு இரச மணியை இங்கு கூறி விளக்குகிறார். இப்பாடல்கள் வாயிலாக அந்த இரசமணி செய்திடும் வித்தைகளும் அதன் மகிமை களும் தெள்ளத் தெளிவாக விளக்குகிறார்.

*1. கேளப்பா புலத்தியனே ரசத்தில் போதம்*
*கெடிபடா சிவனைப் போல் வார்த்துக் கொண்டு*
*தாளப்பா பூஜை செய்யக் கைலாச போதம்*
*தப்பாமல் சதகோடி காலமாகும்.*
*தேளப்பா கொட்டினதோர் விஷத்தைப் போல*
*தேடரிது ரசத்தினுட குளிகையோகம்*
*வாளப்பா புலத்தியனே நாவினுள்ளே*
*வாயடக்கம் செய்து கொள்ள யோகமாச்சே.*

*2. ஆச்சப்பா புலத்தியனே சூதம் கட்ட*
*ஆராலும் முடியாது அறிவான் சித்தன்*
*பேச்சப்பா அக்கினியில் செயித்ததனால்*
*பேரண்டம் கிழிந்தாடும் வேதை ஆகும்.*
*நீச்சப்பா இதைக் கட்ட வகையைக் கேளு*
*நீதி எவர்களும்கூட வரிதாமப்பா*
*ஏச்சப்பா இதனுடைய வர்மம் சொல்வேன்*
*எந்தனுக்கு பரையீசன் இதைத் தந்தானே.*

3. தானென்ற புலத்தியனே வகையைக் கேளு
 தயங்காமல் சொல்கிறேன் வகைதானப்பா
கோனென்ற அழலாடி எனக்குச் சொன்னார்
 குறிப்பாக மனந்தேறி கூறிச் சென்றேன்
ஏனென்றால் புலத்தியனே உனக்கு யானும்
 இன்பமுடன் சொல்லிவிட்டேன் கருத்தானப்பா
ஊனென்ற சூதமொன்று வெள்ளையொன்று
 உத்தாமணி சாரதனால் இதனை ஆட்டே.

4. ஆட்டப்பா கருவூமத்தனுட சாற்றில்
 அது ரெண்டு கடிகைபட ஆட்டிக் கொண்டு
நீட்டப்பா ரவியுடைய கிண்ணிதானும் நிலக்கவே
 நாலுவிரல் அங்குலத்தால் மூட்டப்பா
ஒட்டிலிட்டுச் சீலை செய்து மூதண்டக்
 குக்குடத்தில் புடத்தைப் போடு
கோட்டப்பா மேலேறி பதங்கம் காணும்
 குமுற வளிகாரமிட்டே உருவாக்கிக் கொள்ளே.

5. கொள்ளப்பா மணியதுபோல் உருகியாடும்
 குருமுகம் போல் ஒளிவுமிகும் கருப்பதாகும்
மெள்ளப்பா அதனுடைய வேதை மார்க்கம்
 வெட்டவெளி குருடனுக்கு மெய்க் கோலப்பா
உள்ளப்பா கொண்டு ஜீவனங்கள் செய்வர்
 தள்ளப்பா இதுவல்ல காரியசித்தி
தாண்டவமே புரிவதற்கு பூஜை பண்ணே.

6. பண்ணப்பா ஓராண்டு (பூஜை) செய்தாயாகில்
 பராபரமே உனக்கு வந்து ஏவல் செய்யும்
விண்ணப்பா ஒருவருக்கும் மணி சொல்லாதே
 வேதாந்த நரகத்தில் வீழ்ந்து மாள்வர்



கண்ணப்பா உனக்கேத்த பிள்ளையானால்
கைமுறையாய் செய்து அவன் குணத்தைப் பாரு
ஒண்ணப்பா கருவைத்தான் ஒளிக்கவில்லை.
உற்றுணர்ந்து மனம் தேறிபாருபாரே.

7. பாரப்பா இதற்கு கைலாசம் உண்டாம்
பாரார்கள் சித்தர் இதை மறைத்துப் போட்டார்
ஆரப்பா எனைப் போல திறந்து சொல்வார்
ஆச்சரியம் இதனுடைய வேகமப்பா
ஓரப்பா இதனாலே யோகசித்தி உத்தமனே
சிவபூஜை பண்ண நன்று
காரப்பா இது தனக்கு பூஜை செய்து
கருவாக அர்ச்சனை செய் பதங்கம் செய்யே.

8. செய்யப்பா இப்படியே பூஜை கொண்டு
திறமாகச் செய்ய வல்லோர் பலத்தைக் கேளு
மெய்யப்பா அவனுடைய பிதுர்களுக்கெல்லாம்
மிக்க கோடி நராஜென்மம் அல்ல அல்ல
பொய்யப்பா சொல்லவில்லை தேர்ந்து பாரு
புலத்தியனே உன்றனுக்குக் கருவைச் சொன்னேன்
வையப்பா பூஜையிலே என்னை வைத்து
மவுனமாய் சிவனைவைத்து நோக்கு நீயே.

9. நீயென்றும் நானென்றும் வேறுமில்லை
நிராகரம் போல உந்தனுக்குக் காணும்
நாயென்றும் ஜன்மத்தால் தாண்டியே ஏத்தும்
நற்ஜென்மம் அல்ல அப்பன் சித்தன் சித்தன்
பாயென்றால் கூடுவிட்டு கூடு பாயும்
பதறாமல் இருந்து கொள்ள கவுனம் சாரும்
நோயென்ற வறுமையெல்லாம் அகன்று போகும்
நுண்ணியமாய் சிவலிங்க போதம் தானே

10. தானென்ற குளிகை ஜெபமாலை செய்து
தாக்கப்பா பதினாறு நடத்தானொன்று
மானென்ற மதி யானை வட்டம் செய்ய
மகமேரு போலவுமே ஒளியும் காணும்
கோனென்ற அவள் ரூபம் சொல்லப் போகா
கோடிரூபம் அவன் சொல்லக் கேளு
தோனென்ற மனோன்மணியாள் சிவனுமங்கே
சித்தித்த போதமெல்லாம் தெரியும் தானே.

தேரையர் இப்பாடலில் தன் மாணாக்கர்களுக்கு இரச மணியின் மகத்துவத்தையும் அதன் செய்முறையையும் கூறி விளக்குகிறார். சிவபூஜை செய்து முக்தி அடைய பலகோடி காலம் ஆகும் என்றும், இரசத்தைக் கொண்டு குளிகை கட்டி நாவினுள் வைத்து வாயில் அடக்கினால் யோகங்கள் யாவும் கைவரப் பெற்று சித்தியுண்டாகும் என்றும்,

எவராலும் சூதத்தைக் கட்ட இயலாது என்றும் தீயை வென்று நின்றாடிடும் இந்த சூதத்தைக் கட்டும் முறையைக் தான் கூறக் கேட்டிடுமாறும், இம்முறையை பரமனாகிய ஈசன் தமக்குக் கூறியருளியதாயும் கூறிய தேரையர் அதன் செய் முறைதனையும் விளக்குகிறார்.

சூதமாகிய இரசத்தையும், வெள்ளைப் பாஷாணத்தையும் சரி எடையாக எடுத்துக்கொண்டு கல்வத்தில் இட்டு உத்தா மணிச் சாறினை விட்டும், பின் கருவூமத்தம் சாறினையும் விட்டும் இரு கடிகைப் பொழுதுக்கு அரைத்து முடிக்கவும்.

இவ்வாறு அரைத்து எடுத்த விழுதினை நான்கு விரல் அகலத்துக்கு வில்லைகளாக்கி வெய்யிலில் உலர்த்தவும்.

இவ்வாறு உலர்த்திய வில்லைகளை ஓடு ஒன்றிலிட்டு செம்பு கிண்ணி ஒன்றினால் மூடி வலுவாகச் சீலைமண் செய்து உலர்த்தி குக்குடப் புடத்திலிட்டு எடுத்திடவும். இவ்வாறு

புடமிட்டு முடித்ததும் அதனைப் பிரித்துப் பார்க்க மூடிய செம்புக் கிண்ணியில் பதங்கமாகி இருக்கும்.

இவ்வாறு பதங்கமாகி இருக்கும் இரசத்தினோடு காரத்தைச் சேர்த்து உருக்கிட இரசமானது மணிபோல் உருகிடும். இவ்வாறு உருகிடும் மணியானது குருமுகம் போல் ஒளிவீசும். இம்மணியின் வேதை மார்க்கத்தைக் கொண்டு அறிவற்ற மூடர் இரசவாதி எனக் கூறி ஜீவனம் செய்திடுவர். ஆனால் இது காரிய சித்தி ஆகாது.

இவ்வாறு கட்டிய மணியை ஓராண்டு காலம் பூஜை செய்து வணங்கி வர அம்மணி மூலம் பற்பல வித்தைகளும், சித்திகளும் உண்டாகும். இத்தகைய மகத்துவம் வாய்ந்த இரச மணியைப் பற்றி எவருக்கும் சொல்லிடாது உன் மனதுக்கேற்ற சீடனுக்கு கைமுறை பாகம் தவறாது கூறிடுமாறும் தான் இதன் செய்முறையில் எதனையும் ஒளித்திடவில்லை என்றும்-

ஆனால் சித்தர்கள் பலபேர் இதன் செய்முறையை மறைபொருளாக மட்டுமே கூறியதாகவும், தாம் மட்டுமே ஒளிவு மறைவு இன்றி வெட்டவெளிச்சமாகக் கூறியுள்ள தாகவும், இம்மணியின் வேகம் அதிகம் எனவும், இதனால் யோகசித்தி உண்டாகும் என்றும், எனவே இம்மணிதனை அருளிய சிவனார்க்கு பூஜை செய்து வணங்குமாறும் இதனால் சிவனும் ஜீவனும் வேறல்ல ஒன்றே என உணரமுடியும் என்றும், கூடுவிட்டுக் கூடு பாய இயலுமென்றும், ஆகாய வெளிதனில் பறந்து திரிந்திட முடியுமென்றும், நோய் நொடிகள், வறுமை போன்றவை அகலும் என்றும்,

இந்த இரசமணியைக் கொண்டு ஜெபமாலை செய்து அணிந்திட ஞானம் கைவரப் பெறும் என்றும், மேருமலை போன்று ஒளியும் காணும் என்றும், தாயான மனோண் மணியையும் சிவனையும் உணர்வு நிலையில் தியானத்தால் அறிந்திட இயலுமென்றும் கூறியருளுகிறார்.

மேலும் மருத்துவம், வாதம் போன்ற நூல்களிலும், மந்திர தந்திர சாஸ்திரங்களிலும், அனைத்திற்கும் இரசமானது தலைசிறந்தது என்றும், யாவற்றிற்கும் சக்கரவர்த்தி போல விளங்குவது என்றும் அறியலாம்.

இரசமானது தேகத்தை நலமுடன் வைத்திருப்பது என்றும், அவ்வாறு நலமுடன் தேகம் உள்ள நிலையை என்றும் காத்திருப்பது என்றும், தேக நலத்தை கேட்டிற்கு உள்ளாக்கும் வியாதிகளைப் போக்குமென்றும் என உண்டாக்குதல், காத்தல், அழித்தல் என முத்தொழில்களை இது புரிவது என்றும், மேலும் இளமையை என்றென்றும் நிலைபெறச் செய்வது என்றும், ஈசனுக்கு ஒப்பானது என்றும் சித்தர் பெருமக்கள் கூறியருளியுள்ளனர்.

சித்தர் பெருமக்கள், இரசமானது மனித உடம்பின் நலத்திற்கு இன்றியமையாத சிறப்பு இயல்பினை உடையதாகையால் இதன் பெருமையை சிறப்பித்துக் கூறுகின்றனர். மேலும் இரசம் மனிதர்க்கு அறம், பொருள் இன்பம் என்னும் மூன்றினையும் அருள்வது. சகலவிதமான மந்திரம், தந்திரம், பூதம், பைசாசம் போன்றவற்றால் உண்டாகும் வினைகளுக்கு எமனைப் போன்றது என்றும் இதனால் ஆகாயத்தில் வலம் வர இயலும் என்றும் அட்டமா சித்திகளான பரமாணு போல் ஆதலான அணிமாவையும், இலேசாதலான இலகிமாவையும், அதிக கனமாதலான கரிமாவையும், பெரும் உருவெடுத்தலான மகிமாவையும், விரும்பியவாறு அடைதலான பிராப்தியையும், கூடுவிட்டுக் கூடு பாய்தலான பிரகாமியத்தையும், மேம்படலான ஈசத்துவத்தையும், தன் வசமாக்கலான வசித்வத்தையும் அளிக்க வல்லது என்றும், இதன் அருமையை அருந்தவம் செய்தோர் மட்டுமே உணர்ந்திட இயலுமென்றும், பவழம் போன்ற செம்மேனியரான சிவனை

ஒக்கும் என்றும், இதுவே சிவம் என்றும், இதுவே நவநிதி என்றும் கூறியருளினர். இதனையே தேரையர் பெருமான்

*அத்தமாக்கும் அரசும் அளித்திடும்*
*சுத்தமாக்கும் சுகத்தை மிகத்தரும்*
*புத்த மந்திர பூத பைசாச பேய்*
*இத்தனைக்கும் யமன் இதாகும்.*

*கவன வேகங்களுக்கு இது மூலமாய்ப்*
*புவன மீதப் பொருளுமளித்திடும்*
*சிவனறிந்தது செப்ப வொண்ணாதது*
*தவமு நற்றினர் தலைகட்கு வாய்ப்பதே.*

*இடிவிலக்கும் எளியனல் மாற்றிடும்*
*தடிவிலக்கும் மெய்தனில் வெட்டைக்*
*கடிவிலக்கும் கடிவிலங்கைத் தெனும்*
*மிடிவிலக்கும் விரை புனலாற்றுமே.*

*வேதை காட்டு மிகுதிறன் சத்துரு*
*வாதை காட்டும் மகிமையைக் காட்டுமேற்*
*காதை காட்டும் கவனத்தைக் காட்டுமா*
*போதை காட்டும் பொருணிலை காட்டுமே.*

*பவளம தரித்திற் கணிந்து பழுத்த செம்பழமீதென்ன*
*உவமமில்லா மற்றொன்றும் உயர் பொருளதனையாக்கும்*
*நவமணி நவமணிப் பொன் நவநிதி என்னலாமே.*

என்று கூறியருளுகிறார்.

மேலும் பழங்காலத்தில் நம் சித்தர் பெருமக்கள் இத்தகைய இரசவாதத்தைக் கையாண்டு தரம் தாழ்ந்த உலோகத்தைத் தங்கமாக மாற்றி பெரும் பொருள் ஈட்டினர். இவ்வாறு ஈட்டிய பொருளைக் கொண்டு தான தர்மங்கள்,

இலவச வைத்தியம், கோயில்கள் எழுப்புதல் என பலவற்றைச் செய்து வந்தனர்.

இந்த இரசத்தைக் கொண்டு உடம்பினைக் காய கல்பமாக்கி நீண்ட நாட்களுக்கு வாழவைத்திடும் அரும்மருந்துகளைச் செய்தும் வைத்தனர். காயகற்பம் என்பதன் உள்ளர்த்தத்தையும் புரிந்து கொள்வது நல்லது. காயம் என்றால் உடம்பு ஆகும். கற்பம் என்றால் பல ஆண்டு கள் அழிவின்றி உடம்பினை நிலை நிறுத்திடுவது. கால அளவில் மாத்திரைப் பொழுது என்பது சிறு அளவாகும். கற்பம் என்பது நீண்ட நாட்களைக் குறித்திடும். எனவே காயகற்பம் என்றால் உடம்பை நோய்நொடி ஏதுமின்றி வெகு காலத்திற்கு காத்துக் கொள்ள வைப்பது என்று பொருள் கொள்ளலாம்.

**இரச பதங்கம் :**

இரசபதங்கம் பற்றிய முறைமையை இங்கு பார்ப்போம். இரசத்தை போதுமான அளவு எடுத்துக் கொண்டு அதனை முறையாக சுத்தி செய்து அதன் தோஷங்கள், சட்டைகள் ஆகியவற்றைப் போக்கி எடுத்துக் கொள்ளவும். பின் இவ்வாறு சுத்தி செய்த இரசத்தினைக் கல்வத்தில் வைத்து வெடியுப்பு திராவகத்தைக் கொண்டு நன்றாக அரைத்திடவும். இவ்வாறு அரைத்து எடுத்த விழுதினை வில்லையாகத் தட்டி காய வைத்திடவும்.

வில்லை காய்ந்ததும் தனியாக மூன்று பங்கு கல்லுப்பும் ஒரு பங்கு செங்கல் தூளையும் ஒன்றாகக் கலந்து கொள்ளவும். இக்கலவையில் பாதியை சட்டி ஒன்றில் போட்டு சமமாக் கிடவும். பின் காயவைத்து எடுத்த இரசவில்லையை வைத்து உப்பு செங்கல்தூள் கலவை மீதம் உள்ளதை அதன் மீது போட்டு மேல் சட்டி ஒன்றினால் மூடி வலுவாகச் சீலைமண் செய்திடவும். இவ்வாறு தொடர்ந்து 12 மணி நேரப் பொழுது

எரித்து முடித்ததும் இறக்கி ஆறவிட்டுப் பிரித்துப் பார்க்க மேல் சட்டியில் இரசம்பதங்கமாகி இருக்கும்.

பின் இதனை மீண்டும் கல்வத்தில் வைத்து முன் போலவே வெடியுப்பு செயநீரான திராவகத்தை விட்டு நன்றாக அரைத்து வில்லையாக்கிக் காயவைத்து முன் போன்றே சட்டியில் வைத்து மூடி சீலைமண் செய்து அடுப்பில் ஏற்றி எரித்து முடிக்கவும். இவ்வாறு மீண்டும் மீண்டும் தொடர்ந்து செய்து வரும்போது இரசமானது பதங்கமாக மேல் சட்டியில் படியாது அடிச்சட்டியிலேயே தங்குகிறதோ அப்போது அதனை எடுத்துத் தூளாக்கிக் குப்பியில் இட்டுப் பத்திரப் படுத்திடவும்.

இம்மருந்தில் கால் முதல் அரை அரிசி எடையளவு எடுத்து தேன், நெய் என தக்க அனுபானம் சேர்த்து கொடுத்து வர மேகநோய்கள், மேகத்தால் உண்டான புண்கள் என யாவும் நீங்கிக் குணமாகும். இவை தவிர குன்மம், குஷ்டம், சூலை, கப நோய்கள், சந்நிபாத சுரங்கள், வாத நோய்கள் என யாவும் நீங்கிடும். இவ்வாறு இம்மருந்தினை உட்கொள்ளும் சமயத்தில் பத்தியமாய் புளி, உப்பு, புகையிலை, பெண் போகம் தவிர்த்து மருந்தினை உண்டு வருதல் அவசியமாகும்.

## 11. கீல்வாதம், மேக வெள்ளை, கிரந்தி ஆகியவற்றிற்கு இரசமெழுகு

முறைப்படி சுத்தி செய்து எடுத்த வாலை இரசம் நாற்பது கிராம், பரங்கிப்பட்டை சூரணம் நாற்பது கிராம், திப்பிலி சூரணம் எண்பது கிராம், வெல்லம் கால்கிலோ ஆகியவற்றை எடுத்துக் கொள்ளவும்.

முதலில் வாலை ரசத்துடன் வெல்லத்தைச் சேர்த்து கல்வத்தில் வைத்து அரைத்திடவும். இவ்வாறு அரைக்க இரச

மானது மடியும். பின் இதனுடன் பரங்கிப்பட்டை சூரணம், திப்பிலி சூரணம் ஆகியவற்றையும் சேர்த்து மெழுகு பதமாக அரைத்திடவும். இவ்வாறு அரைத்து எடுத்த மெழுகு மருந்தினை பத்திரப் படுத்தி காலை மாலை என இருவேளையுமாக, வேளை ஒன்றுக்கு நூறு மில்லி கிராம் அளவுக்கு எடுத்து பனை வெல்லத்துடன் சேர்த்து மூன்று நாட்களுக்குக் உட்கொண்டு வர மேக வெள்ளை, மேகத் தடிப்பு, மேகப்புண், மேக சூலை, கிரந்தி, கீல்வாதம், இரத்த வெள்ளை என யாவும் நீங்கிக் குணமாகும்.

இதே போன்று இரசம், கெந்தகம் ஆகியவற்றைச் சேர்த்து அரைத்து எடுத்த இரசகெந்தி மெழுகில் தினமும் காலை, மாலை என இருவேளையுமாகி வேளைக்கு அரைகிராம் அளவு வீதம் எடுத்து பனை வெல்லத்துடன் சேர்த்து உட்கொண்டு வர வாதரோகம், சொரி சிரங்கு, மேக ரோகம், குஷ்டம், விரணம், சீலைப் புண், பவுத்திரம், முலவியாதி, புழுவெட்டு, கிரந்திப் புண், புற்று நோய் ஆகியவை நீங்கிக் குணம் உண்டாகும்.

## 12. இரச பற்பம்

*சூதத்தரு வெண்மை தொன் மங்களம் பொற்*
*சூதத்தரு வெண்மை தோரையொன்றே - சூதக்*
*குருகுளிகை யூராறு கொண்டறிவார் கண்ட*
*குரு குளிகை யீராறு கொள்.*

மாமரத்தின் கண்ணுள்ள விமலம் என்னும் மாவிலை பழைய மங்கலக் குறியைக் கொடுப்பது போல, இரசத்தின் அருமையான பற்பம் ஆகும். சூதம் என்னும் இரசத்தால் ஆன பற்பம் என்னும் குருமருந்தினை ஒரு துவரை அளவுக்கு எடுத்து குளிகையாக்கி, வைத்தியம், விரதம் என்னும் இரு வழிகளைக் கருவியாகக் கொண்டு அதன் பயனை அறிவாளி

கள் அறிந்திடுவர். மேலும் புழுவைப் பார்த்த குளவியானது அதனிடம் உள்ள குற்றங்களைப் போக்குவது போன்று குருமருந்தாகிய இரசபற்பமும் உடலில் உள்ள நோய்களைப் போக்கிக் குணமாக்கிடும்.

செய்முறை:

இரசம் ஒரு பலம் (35 கிராம்) அளவு எடுத்து அதனை முறையாக தோஷங்கள், சட்டைகள் ஆகியவற்றை நீக்கி சுத்தி செய்து கொள்ளவும். பின் இதனைக் கல்வத்தில் வைத்து மூன்று பலம் (105 கிராம்) அளவு கவுரி வால்புல் சாற்றினை விட்டு ஐந்து நாட்களுக்குக் கைமாறாது அரைத்திடவும்.

அரைத்து எடுத்த விழுதினை வில்லையாகத் தட்டி ஐந்து நாட்களுக்கு உலர்த்திடவும். பின் ஓடு ஒன்றில் வில்லையை வைத்து மேலோடு மூடி வலுவாகச் சீலைமண் செய்து ஒரு நாள் பொழுதுக்கு உலர்த்திடவும். பின் இதனை ஐம்பது எரு கொண்டு புடமிட்டு எடுக்கவும். புடமிட்டதை ஆறவிட்டு உள்ளிருக்கும் மருந்தினை மீண்டும் கல்வத்தில் வைத்து கருவூமத்தைச் சாறு மூன்று பலம் (105 கிராம்) விட்டு கைமாறாது ஐந்து நாட்களுக்கு அரைத்து வில்லையாக்கி உலர வைக்கவும். பின் முன்போன்றே சீலைமண் செய்து ஐம்பது எரு கொண்டு புடமிடவும். புடமிட்டு எடுத்ததும் மீண்டும் அதனைக் கல்வத்தில் வைத்து ஆலங்கொழுந்துச் சாறு விட்டு அரைத்து வில்லையாக்கிக் காய வைத்து முன்போலவே சீலை மண் செய்து ஐம்பது எரு கொண்டு புடமிட்டு எடுக்கவும்.

புடம் ஆறியதும் அதனைப் பிரித்து எடுத்து முன்போலவே கல்வத்தில் வைத்து கம்மாறு வெற்றிலைச்சாறு மூன்று பலம் (105 கிராம்) விட்டு ஐந்து நாட்கள் அரைத்து வில்லையாக்கி ஐந்து நாள் காயவைத்து சீலைமண் கவசம் செய்யவும். உலர்ந்த

பின் ஒருநாள் கழித்து நாற்பது எரு கொண்டு புடமிட்டு எடுக்கவும்.

புடம் ஆறியதும் அதனைப் பிரித்து எடுத்துக் கல்வத்தில் வைத்து முன்போலவே பேரீச்சம் பழச்சாறு மூன்று பலம் (105 கிராம்) அளவு விட்டு ஐந்து நாட்கள் அரைத்து வில்லை தட்டி ஐந்து நாள் காயவைத்து, பின் சீலைமண் கவசம் செய்து ஒரு நாள் உலரவிட்டு முப்பத்தைந்து எரு கொண்டு புடமிட்டு எடுக்கவும்.

புடம் ஆறியதும் உள்ளிருக்கும் மருந்தைப் பிரித்துப் பார்க்க மருந்து வெந்து நீறிப் பற்பமாகி இருக்கும். இப் பற்பத்தை தூளாக்கிப் புட்டியில் அடைத்து ஐம்பது நாள் கழித்து எடுத்துப் பயன்படுத்திடவும்.

இந்த இரச பற்பம், தேமல், இருமல், ஈளை, மேக வியாதிகள், கிரந்திப் புண்கள் ஆகியவற்றை நீக்கிக் குணம் அளிக்கும் வல்லமை உடையது ஆகும்.

## 13. செயற்கை உலோகத் தயாரிப்பு

இரசவாதத்தைக் கொண்டு மட்டமான உலோகங்களான ஈயம், செம்பு, பித்தளை, வெள்ளி போன்றவற்றை தங்கமாக மாற்ற முடியும். இது செய்ய இயலுமா? என சந்தேகம் எழக் கூடும். காரணம் இரசவாதம் மூலம் இரும்பைப் பொன் னாக்கித் தருகிறேன் எனக் கூறும் கயவர்களை நம்பி ஏமாறும் கூட்டம் நம்மில் பல இருந்து வருகின்றன. அதன் காரணமாக இது வெல்லாம் நடக்கக் கூடிய காரியமா? என மனம் வருந்திக் கூறுபவர்களும் உள்ளனர்.

மூலிகைகள், சிலவகை மரப்பட்டைகள், பூக்கள், பச்சிலைகள் ஆகியவற்றிற்கு மருத்துவ குணங்கள் உள்ளதாக

பல ஆய்வுகள் மூலம் அனைத்து வைத்திய முறைகளுமே ஒப்புக் கொள்கின்றன. அவற்றில் பல நடைமுறையிலும் பயன்படுத்தப்பட்டும் வருகின்றன.

இவைதவிர சிலவகை பாஷாணங்கள், உப்புகள், உலோகங்கள் போன்றவையும் சித்த வைத்தியம், ஆயுர்வேத வைத்தியம் ஆகியவற்றின் மருந்துகளின் மூலப் பொருட்களாகவும் உள்ளன. உலோகங்கள் அடைந்திருக்கும் வேதியல் மாற்றங்களின் விளைவே பாஷாணங்களும், உப்புகளும் என இன்றைய அறிவியல் வல்லுனர்கள் ஒப்புக் கொள்ளவும் செய்கின்றனர்.

அன்றைய தினம் சித்தர்கள் செய்திட்ட பிரமிக்கத்தக்க வேதியல் ஆராய்ச்சிகளே இன்றைய வேதியல் ஆராய்ச்சிகளுக்கு அடைப்படை என்பதை அறிவியலார் அனைவரும் ஒப்புக் கொள்ளுகின்றனர்.

ஒரு ஊரில் பச்சை நிறத்துடன் இருக்கும் தாவரம் சில மைல்களுக்கு அப்பால் இருக்கும் வேறொரு ஊரில் சற்று சிவந்து காணப்படுகிறது. இதற்குக் காரணம் இரண்டாவது ஊரில் உள்ள மண்ணில் தாமிரக் கலப்பு சற்று அதிகம் உள்ளது என ஆய்வு மூலம் தெளிவுபடுத்துகின்றனர். இதே போன்று மூலிகைகளில் உலோகச் சத்து, பாஷாணம், உப்பு போன்ற சத்துக்கள் அடங்கியுள்ளன. இவற்றுடன் இயற்கையாக கிடைக்கக் கூடிய உயிர்ப் பொருட்கள் உள்ளிட்ட அனைத்திலுமே முன் கூறப்பட்ட சத்துக்கள் கலந்துள்ளதைக் கண்டறிந்த சித்தர்கள் அவைகளின் வேதியல் இயல்புகளையும் ஆய்வு செய்து அறிந்தனர்.

இத்தகைய ஆய்வுகளின் விளைவாக உலோகங்களை உப்புகளாகவும், செந்தூரமாகவும், நீறாகவும் மாற்ற இயலும் என நிரூபித்தனர். இவ்வாறு உலோகத்தை உப்பாக மாற்ற இயலும் எனத் தெரியவரும் சமயத்தில் ஒரு உப்பினை

உலோகமாக மாற்றிடுவது கஷ்டமான காரியமாக இருந்திட வாய்ப்பு இல்லை. இத்தகைய அடிப்படை வாதமே இரசவாதத்திற்கு சித்தாந்தமாக அமைகிறது.

உலோகத்தை உப்பாகவும், உப்பினை உலோகமாகவும் மாற்றிட இயலும் போது ஒரு உலோகத்தை மற்றொரு உலோகமாக மாற்ற முடியுமா? என எண்ணியதன் விளைவே இரசவாதம் என்னும் சித்தர்களின் அரிய கண்டுபிடிப்பு ஆகும்.

இனி எந்த எந்த உலோகத்தை எந்த முறையில் மற்றொரு உலோகமாக மாற்ற முடியும் என்பதை விரிவாகக் காண்போம்.

## 14. செயற்கைத் தங்கம் தயாரிப்பு

வைப்புத் தங்கம் அல்லது வாதப் பொன் என்பது இயற்கையில் கிடைத்திடும் தங்கத்தைப் போன்று செயற்கையாகத் தயாரிக்கப்படும் தங்கத்தைக் குறிப்பதாகும். இத்தகைய தங்கத்தைத் தயாரித்திட சுத்தமான வெள்ளி பயன்படாது. இதற்கு செயற்கை முறையில் தயாரிக்கப்படும் வாத வெள்ளியே பயன்படும்.

* மனோசிலை, வெண்காரம், கந்தகம், நாகி, கலப்பைக் கிழங்கின் சாறு ஆகியவற்றைப் போதுமான அளவு எடுத்துக் கொள்ளவும். பின் இவற்றை கல்வத்திலிட்டு பாஷாண நீரினை விட்டு நன்றாக அரைத்துக் கொள்ளவும். இவ்வாறு அரைத்து எடுத்த விழுதினை வாத வெள்ளித் தகட்டின் கீழும் மேலுமாகப் பூசி மூசையில் இட்டு ஊதினால் வாதப் பொன் கிடைத்திடும்.

* பத்து பங்கு தங்கம், ஒரு பங்கு தாமிரம், ஏழு பங்கு வாத வெள்ளி ஆகியவற்றை ஒன்றாக உலையில் இட்டு ஊதினால் வாதப் பொன் நமக்குக் கிடைக்கும்.

★ மூலிகைகளில் க்ஷீர கந்தம் என்றொரு வகை உண்டு. வானத்தில் இடி இடிக்கும்போது கள்ளியைப் போன்றிருக்கும் இலைகள் இம்மூலிகையில் தோன்றும். இம்மூலிகையின் அடிக் கிழங்கை எடுத்து வந்து கழுவி சுத்தம் செய்து இடித்துப் பிழிய சிவந்த நிறத்துடன் சாறு கிடைத்திடும். இச்சாறினை வாத வெள்ளித் தகட்டில் கீழ் மேலாகப் பூசி துருத்தியைக் கொண்டு ஊதி உருக்கிட வாதப் பொன் கிடைத்திடும்.

★ வாலுளுவை அரிசியின் விதைகளை எடுத்து பத்திரப் படுத்தவும். ஆடி மாதத் தேய்பிறையில் அதனை செக்கிலிட்டு ஆட்டி எண்ணெய் எடுத்திடவும். இந்த எண்ணெயை தாமிரத்தால் செய்யப்பட்ட சிறு குவளையில் ஊற்றி நன்றாக மூடி பூமியில் புதைத்து உமிப்புடமாகப் போட்டு எரித்திடவும். பின் ஆறுமாதம் கழித்து மீண்டும் இதே மாதிரி உமிப்புடம் போட்டு எரித்திட தாமிரக் குவளை வாதத் தங்கக் குவளையாக மாறி இருக்கும்.

★ கந்தகம், பாதரசம், பொன் நிமிளை, செஞ்சந்தனம், அழகண்ணிச் சாறு ஆகியவற்றை அரைத்து வாத வெள்ளித் தகட்டில் மேலும் கீழுமாகப் பூசி உருக்க வாதப் பொன் கிடைத்திடும்.

★ பொன்நிமிளையை கல்வத்தில் இட்டு அரைத்திடவும். இவ்வாறு அரைத்து எடுத்த விழுதினை செம்புத் தகடு ஒன்றின் கீழும் மேலும் பூசி நாள் முழுவதும் வைத்திருந்து மறுநாள் முறைப்படி புடமிட்டு எடுக்கவும். இதே போன்று இரசத்தை கல்வத்திலிட்டு குப்பை மேனிச் சாறினை விட்டு அரைத்து முன்கூறியபடியே தனியாகப் புடமிட்டு எடுக்கவும். இவ்வாறு புடமிட்டு எடுத்த இரண்டையும் ஒன்றாகச் சேர்த்து கௌதாரிப் புடத்தில் போட்டு எடுக்க மாற்றுப் பொன் கிடைக்கும்.

# 15. செயற்கை வெள்ளி தயாரிப்பு

வெண்வங்கமும், தாமிரமும், வெள்ளியின் குணங்களுக்கு ஒத்து இருக்கும் உலோகங்கள் ஆகும். இவை இரண்டும் வாத வெள்ளி என அழைக்கப்படும் செயற்கை வெள்ளி தயாரிப்புக்குப் பயன்படுகின்றன. தாமிரத்தில் களிம்பு சிவந்து காணப்படும். இனி செயற்கை வெள்ளி தயாரிப்பு முறைகள் பற்றிக் காண்போம்.

★ 100 கிராம் தாமிரத்தை எடுத்து உருக்க வேண்டும். இவ்வாறு அடுப்பில் தாமிரத்தை ஏற்றி உருக்கும் போது அது உருகத் துவங்கும் சமயத்தில் ஆறு கிராம் அளவு பாஷாண குருவைச் சேர்த்து உருக்க தாமிரம் வெள்ளி போன்று மாறும். அச்சமயத்தில் தாமிரத்தின் எடைக்கு கால்பங்கு சுத்த வெள்ளியைச் சேர்த்து உருக்கினால் வாத வெள்ளி கிடைத்திடும்.

★ 280 கிராம் கந்தகம், 70 கிராம் வெடியுப்பு ஆகியவற்றை எடுத்து கல்வத்திலிட்டு சர்ப்பகந்தி இலைச்சாறு விட்டு பனிரெண்டு மணி நேரத்திற்கு அரைத்து எடுத்து உலர்த்திக் கொள்ளவும். பின் தாமிரம், சுத்த வெள்ளி ஆகியவற்றை சம எடையாக எடுத்து அடுப்பில் ஏற்றி உருக்கிடவும். இரண்டும் ஒன்றாகச் சேர்ந்து உருகத் துவங்கும்போது முன் அரைத்து உலரவைத்து இருக்கும் மருந்தைத் துளாக்கித் தூவிடவும். இவ்வாறு உப்புத் தூளை சிறிது சிறிதாக தூவி நன்றாக உருகியதும் அதனை அடுப்பில் இருந்து இறக்கி ஆறவிட்டு உடைத்துப் பார்க்க, வாதவெள்ளி நல்ல முறையில் நிறம் ஏறியிருக்கும்.

★ நாகம் அறுபது கிராம், தாமிர வெள்ளை நூற்றிருபது கிராம் என எடுத்து ஒன்றாக உருக்க ஒருவித கலப்பு

உலோகம் கிடைத்திடும். இக்கலப்பு உலோகத்தை ஒரு பங்கு எடுத்து அதற்கு இருமடங்கு வெள்ளியைச் சேர்த்து உருக்க வாத வெள்ளியானது கிடைத்திடும்.

★ மூலிகைகளில் வேளை என்றொரு வகை உண்டு. அதனை சமூலமாகக் (கொழுந்தில் இருந்து அடிவேர் வரையில் உள்ள அனைத்து பாகங்களும்) கொண்டு வந்திடவும். இதன் பூக்கள் மஞ்சளாக இருந்திடும். இச்சமூலத்தை எடுத்து சுத்தப்படுத்தி. உரலில் இட்டு இடித்துச் சாறு பிழிந்து கொள்ளவும். பின் இருப்புச் சட்டி ஒன்றினை அடுப்பில் வைத்து வெண்வங் கத்தைப் போட்டு உருக்கிடவும். வெண்வங்கம் சூடாகி உருகத் துவங்குபோது இந்த வேளைச் சமூலத் தின் சாற்றினை சிறிது சிறிதாக விடவும். குறைந்தது பனிரெண்டு மணி நேரப் பொழுதுக்கு இவ்வாறு உருக்கிட வெண்வங்கம் கெட்டிப்படும். இது ஒரு பங்கும் சுத்த வெள்ளி இரண்டு பங்கும் சேர்த்து உருக்கிட வாத வெள்ளி கிடைத்திடும்.

★ பதினெட்டு கிராம் அளவு வெள்ளைக் குன்றிமணியை எடுத்து அதனுடன் தாமிரம் ஒரு கிலோ ஐம்பது கிராம் சேர்த்து உலையிலிட்டு ஊதி எடுக்க வாத வெள்ளி கிடைத்திடும்.

★ உளித்தகடு 140 கிராம், அன்னபேதி 100 கிராம், வெண்வங்கம் 70 கிராம் என எடுத்துக் கொள்ளவும். பின் தேவைப்படுமளவுக்கு கள்ளினுடைய வண்டலையும் எடுத்துக் கொள்ளவும். முதலில் கள்ளின் வண்டலில் அன்னபேதியைப் போட்டுக் கரைத்துக் கொள்ளவும். பின் உளித் தகட்டை கரி அடுப்பில் போட்டு நன்றாகப் பழுக்கக் காய்ச்சிடவும். பின் காய்ச்சி எடுத்த உளித்

தகட்டை அன்னபேதிக் கரைசலில் தோய்த்து எடுக்கவும். உளித்தகடு நன்றாகக் குளிர்ந்ததும் மீண்டும் கரி அடுப்பில் போட்டு பழுக்கக் காய்ச்சவும். மீண்டும் இதனை அன்னபேதி கரைசலில் தோய்த்து குளிர வைக்கவும். இவ்வாறு தொடர்ந்து செய்து வர உளித் தகடு நொறுங்கித் தூளாகிடும். இத்தூளினை வெண் வங்கத்துடன் சேர்த்து உருக்க வேண்டும். உளித்த கடுத்தூள் வெண் வங்கம் சேர்த்து உருக்கிய கலவை யுடன் அதன் எடைக்கு நான்கு மடங்கு வெள்ளியைச் சேர்த்து உருக்க வாத வெள்ளி கிடைத்திடும்.

## 16. வாதப் பொன் தயாரிப்பு முறை

★ அன்ன பேதி, குஞ்சு பொரித்தபின் எடுக்கப்பட்ட முட்டை ஓடு, சவ்வீரம், நவச்சாரம் ஆகியவற்றை வகைக்கு 40 கிராம் அளவுக்கு எடுத்துக் கொள்ளவும். பின் இவற்றைத் தனித்தனியாகப் பொடித்துக் கொள்ளவும். இப்பொடிகளை ஒன்றாகக் கலந்து கல்வித்திலிட்டு ஆகாசத்தாமரை சாற்றை விட்டு மைய அரைத்திடவும். அரைத்து எடுத்த விழுதினை வில்லையாக்கி நன்றாக உலர வைத்திடவும். ஆகாசத் தாமரையை சமூலமாக எடுத்து வந்து அரைத்திடவும். அரைத்து எடுத்த சமூல விழுதை முன்செய்து வைத்திருக்கும் வில்லைக்குக் கவசமாக இடவும். இவ்வாறு கவசமிட்டு உலர்ந்ததும் மூன்று சீலைமண் செய்து உரை வைத்திடவும். சீலைமண் செய்து முடித்து உலர வைத்ததும் அதன் எடைக்கு ஆறுமடங்கு எடை கொண்ட எருவைக் கொண்டு புடமிடவும். புடமிட்டு முடித்து நன்றாக ஆறியதும் கவசத்தைப் பிரித்து உள்ளிருக்கும் மருந்தை எடுத்திடவும்.

இந்த மருந்துடன் ஆகாசத் தாமரைச் சாறுவிட்டு முன்போலவே மைய அரைத்து லேசான தாமிரத் தகட்டின் மீது

பூசி ஓடு ஒன்றில் வைத்து, மேலோடு மூடி, சீலை மண் வலுவாகச் செய்து முன்போன்றே புடமிட்டு எடுக்கவும். இவ்வாறு தொடர்ந்து ஐந்து முறை புடமிட்டு எடுக்கவும்.

புடமிட்டு எடுத்த தாமிரம் 20 கிராம், வாத வெள்ளி 42 கிராம், தங்கம் இரண்டு கிராம் அளவுக்கு எடுத்து மூன்றையும் ஒன்றாக மூசையில் இட்டு உருக்கவும். இவ்வாறு உருக்கி முடித்ததும் ஆறவிடவும். இப்போது உருகிய உலோகக் கலவை கட்டியாக இருக்கும்.

இக்கட்டியை உடைத்துத் தூளாக்கி முன்போன்று மூசையிலிட்டு உருக்கவும். இவ்வாறு தொடர்ந்து எட்டு முறை உருக்க வாதப்பொன் கிடைத்திடும்.

★ மூக்குத்திப் பூண்டு என்றொரு வகை உண்டு. இதனை சுவர் முள்ளங்கி எனவும் கூறுவர். இதனை எடுத்து கல்வத்தி லிட்டு மைய அரைத்திடவும். அரைத்து எடுத்த விழுதினை லேசான தாமிரத் தகட்டின் மேலும் கீழுமாகப் பூசி ஓடு ஒன்றில் வைத்து, மேலோடு மூடி வலுவாகச் சீலைமண் செய்து உலர்த்தவும். நன்றாக உலர்ந்ததும் புடமிட்டு எடுக்கவும். புடமிட்டு எடுத்ததை மறுபடியும் முன்போலவே செய்து புடமிடவும். இவ்வாறு தொடர்ந்து 20 முறை புடமிடவும்.

இவ்வாறு புடமிட்டு எடுத்த தாமிரத் தகட்டை மூசையில் வைத்து உருக்கவும். தாமிரத் தகடு உருகி வரும் சமயத்தில் நவச்சாரத்தூள் அல்லது கறியுப்பு செந்தூரத்தை சிறிதளவு எடுத்து சுருக்கு கொடுக்கவும். இவ்வாறு தொடர்ந்து மூன்று முறை செய்து எடுத்து தனியாக வைத்துக் குளிரவிடவும்.

இந்த தாமிரத் தகடு 10 கிராம், நல்ல வெள்ளி 20 கிராம், தங்கம் 30 கிராம் என எடுத்து ஒன்றாகச் சேர்த்து உருக்கவும். நன்றாக உருகி கெட்டியானதும் இறக்கி ஆறவிட்டு உடைத்துத் தூளாக்கி முன்போன்று உருக்கிடவும். இவ்வாறு மூன்று முறை உருக்க நமக்கு வாதப் பொன் கிடைத்திடும்.

★ தாமிரத் தகடு பத்துபலம் (350 கிராம்) எடுத்துக் கொள்ளவும். பின் அத்தகட்டினை 15 சமமாகத் துண்டு களாக்கவும். எலுமிச்சம் பழம் நாற்பது எண்ணிக்கையில் வாங்கி வந்து அவற்றை சாறு பிழிந்து கொள்ளவும். கரி அடுப்பினைப் பற்ற வைத்து அதில் தாமிரத் தகடுகளைப் பழுக்கக் காய்ச்சிடவும். தகடுகள் சூடேறி பழுத்ததும் அவற்றை எலுமிச்சம் பழச்சாறில் தோய்த்து எடுக்கவும். இம்முறைப்படியே தொடர்ந்து பத்து முறை செய்து முடித்திடவும்.

சற்று நேரம் கழித்து மீண்டும் தாமிரத் தகடுகளை கரி அடுப்பில் பழுக்கக் காய்ச்சி சுண்ணாம்புத் தெளிவில் தோய்த்து எடுத்திடவும். இம்முறைப்படியே தொடர்ந்து பத்து முறை செய்து முடித்திடவும். பின் தகடுகளைத் துடைத்து சுத்தம் செய்திடவும். கீரை வகைகளில் வெள்ளைச் சாரணைக் கீரை என்றொரு வகை உண்டு. அக்கீரையை கல்வத்தில் இட்டு நன்றாக அரைத்திடவும். அரைத்து எடுத்த விழுதினை எலுமிச்சம் பழச்சாறு மற்றும் சுண்ணாம்புத் தெளிவில் தோய்த்து எடுத்த தாமிரத் தகடுகளின் மேல்கீழாக கனமாகப் பூசி கவசம் செய்திடவும். பின் இக்கவசத்தை சீலைமண் செய்து புடம் போட்டு எடுத்திடவும். இம்முறைப்படியே ஐந்து முறைகள் முடித்துக் கொள்ளவும்.

சிலாச்சத்து, கல்நார், காந்தம் ஆகியவற்றை வகைக்கு கால்பலம் வீதம் ( 9 கிராம்) எடுத்துக் கொள்ளவும். இவற் றுடன் கிளிஞ்சல் சுண்ணாம்பு கால்பலமும் ( 9 கிராம்) சேர்த்து நன்றாக இடித்துத்தூள் செய்திடவும். இத்தூளில் எலுமிச்சம் பழச்சாறு விட்டுப் பிசைந்து தாமிரத் தகடுகளின் மீது பூசி கவசம் இடவும். இவ்வாறு கவசமிட்டு உலரவைத்ததும் இதனை முன்போன்றே புடம் போட்டு எடுத்திடவும். இம்மாதிரியே தொடர்ந்து பத்து முறைகள் செய்து முடித்திடவும்.

முன்கூறியபடி புடம் போட்டு எடுத்த தாம்பிரம் 40 கிராம், வெள்ளி 70 கிராம், தங்கம் 110 கிராம் சேர்த்து ஒன்றாக

உருக்கிடவும். இவ்வாறு உருக்கி எடுத்து ஆறவைத்திடவும். ஆறியதும் அக்கட்டியை உடைத்துத் துண்டுகளாக்கி மீண்டும் உருக்கிடவும். இம்மாதிரி தொடர்ந்து ஏழு முறை உருக்கி எடுக்க நமக்கு வாதப்பொன் கிடைத்திடும்.

★ நெல்லிக்காய் கெந்தகம் 40 கிராம், நவச்சாரம் 40 கிராம் அளவுக்கு எடுத்து தனித்தனியே பொடித்துக் கொள்ளவும். பின் அகல் ஒன்றில் ஒன்றன்மேல் ஒன்றாக இப்பொடிகள் இரண்டையும் பரப்பி அதன் மீதாக தாமிரத் தகட்டை வைத்து மேல் அகலால் மூடி சீலைமண் வலுவாகச் செய்து உலர வைக்க்வும். நன்றாக உலர்ந்ததும் புடம் போட்டு எடுக்கவும்.

இவ்வாறு புடமிட்டு எடுத்த தாமிரம் பத்து கிராம், வெள்ளி நாற்பது கிராம், தங்கம் பத்து கிராம் என அனைத்தையும் ஒன்றாக உருக்கி மெல்லிய தகடாக்கிடவும். பின் முன்கூறிய முறைப் படியே உப்பு, செங்கல் பொடி ஆகியவற்றை அகல் ஒன்றில் ஒன்றன் மீது ஒன்றாகப் பரப்பி அதன்மீது தகட்டினை வைத்து மேல் அகலால் மூடி சீலைமண் செய்து புடம் போட்டு எடுக்க நமக்கு வாதப் பொன் கிடைத்திடும்.

★ 25 கிராம் அளவுக்கு தாமிர அரப்பொடி, 40 கிராம் கடலை புளிப்பு, 90 கிராம் விஸ்கி, 40 கிராம் பூவரசம் பட்டைச்சாறு, 90 கிராம் நாவல்பட்டைச் சாறு, பாதரசம் 18 கிராம், 9 கிராம் நெல்லிக்காய் கெந்தகம், இரச கற்பூரம் 5 கிராம், சவ்வீரம் 5 கிராம், நவச்சாரம் 9 கிராம், தங்க ரேக்கு 5 கிராம் என அனைத்தையும் எடுத்துக் கொள்ளவும்.

பின் இவற்றில் அரைத்திட வேண்டிய கடைச்சரக்குகளை அரைத்து பிற திரவப் பொருட்களை விட்டு நன்றாகக் குழப்பி பீங்கான் குப்பியில் இட்டு மூடிடவும். மூடிய பீங்கான் குப்பியை வலுவாக ஏழு சீலைமண் செய்து உலர வைத்துக் கொள்ளவும். ஐந்து மீட்டர் ஆழமுள்ள குழியில் பீங்கான் குப்பியை (சீலைமண் செய்தது) வைத்து மண்ணைப் போட்டு நன்றாக மூடிடவும். இவ்வாறு மூடிய தினத்தில் இருந்து ஒரு

மாதம் கழித்து குப்பியை வெளியே எடுத்து விடவும். குப்பியை உடைத்து உள்ளிருப்பனவற்றை மூசை ஒன்றில் போட்டு மூடி வலுவாக சீலைமண் மூன்றும் செய்து உலர்த்தவும். இவ்வாறு உலர்த்தியதும் அதனை கொல்லன் உலையில் இட்டு நன்றாகச் சுட்டு எரித்திடவும். இவ்வாறு எரித்து முடித்து ஆற விட்டு அம்மூசையில் இருப்பதை வேறு மூசைக்கு மாற்றிட வும். பின் இம்முசையையும் முன்போன்றே மூடி வலுவாகச் சீலைமண் மூன்றும் செய்து மறுபடியும் உலையில் இட்டு எரித்து எடுத்து நன்றாக ஆறவிடவும்.

நன்றாக ஆறியதும் மூசையைப் பிரித்து உள்ளிருப்பன வற்றை எடுத்து அதன் எடைக்கு நிகராக தங்கத்தைச் சேர்த்து உருக்கி குளிரவைத்துக் கட்டியாக்கிடவும் பின் இந்தக் கட்டியை துண்டுகளாக நறுக்கி மறுபடியும் முன்போலவே உருக்கி எடுக்கவும். இம்மாதிரி செய்ய வாதப் பொன் கிடைத்திடும்.

★ தாமிரத் தகடு 88 கிராம், கந்தகம் 18 கிராம், கல்நார் 18 கிராம், கெந்தகம் 18 கிராம், கல்நார் 18 கிராம், கரும்செம்பை இலை 105 கிராம், விளா இலை 105 கிராம், சிகப்பு முள்ளி கீரை 100 கிராம், சீத்தாப்பழ இலை 100 கிராம், நாவல்பட்டை ச்சாறு அரை லிட்டர் என எடுத்துக் கொள்ளவும்.

சிகப்பு முள்ளிக்கீரை, சீத்தாபழ இலை, கரும் செம்பை இலை, விள இலை ஆகியவற்றை முதலில் இடித்துச் சாறு பிழிந்து கொள்ளவும். இவற்றின் சக்கையை கல்வத்தில் ஒன்றாக வைத்து மைபோல அரைத்து எடுக்கவும். இந்த விழு தினை தாமிரத் தகட்டிற்கு மேல் கீழாக கவசம் இடவும். கவசம் இட்ட தாமிரத் தகட்டை நன்றாக உலரவைத்து வரட்டி ஒன்றின் மீது வைத்து அதன் மீது இன்னொரு வரட்டி கொண்டு மூடிடவும். பின் இதனைச் சுற்றிலும் மேலுமாக நாற்பது வரட்டி கொண்டு புடமிடவும். புடம் ஆறியதும் அதனை தனியாக எடுத்துக் கொள்ளவும்.

நாவல் மரப் பட்டைச் சாறினை மூன்று சமபாகங்களாகப் பிரித்துக் கொள்ளவும். புடமிட்ட தாமிரத்தகட்டை எடுத்து உருக்கிடவும். தாமிரம் உருகியதும் அதனை முதல் பங்கு சாறில் சாய்த்திடவும். நன்றாக ஆறியதும் மீண்டும் அதனை எடுத்து உருக்கவும். உருகியதும் இரண்டாவது பங்கு சாறில் சாய்த் திடவும். இவ்வாறே மூன்றாம் முறையும் உருக்கி சாய்த்திடவும்.

இவ்வாறு உருக்கி சாய்த்த தாமிரம் 18 கிராம், நல்லவெள்ளி 11 கிராம், தங்கம் 15 கிராம் என எடுத்து ஒன்றாக உருக்கி எடுக்க வாதப்பொன் கிடைத்திடும்.

★ பீங்கான் பாத்திரம் ஒன்றினை எடுத்துக் கொள்ளவும். அதில் சம அளவுக்கு எலுமிச்சம் பழச்சாறு, வெள்ளைக் காட்டாமணக்கு பால் ஆகியவற்றை ஒன்றாக விடவும். இதில் ஓலை கனமுள்ள தாமிரத் தகட்டினை எடுத்து ஐந்து நாட்களுக்கு ஊற விடவும். நான்காம் நாளன்று அத்தாமிரத் தகட்டினை வெளியே எடுத்து சுத்தம் செய்து கொள்ளவும்.

ஆகாசத் தாமரையை அரைத்து அதன் விழுதினை தாமிரத் தகட்டின் மேலும் கீழுமாகப் பூசி உலர வைக்கவும். பின் இதனை சிமிட்டியில் வைத்து முடி மூன்று சீலைமண் வலுவாகச் செய்து உலர வைக்கவும். நன்றாக உலர்ந்ததும் அதன் எடைக்கு பத்து மடங்கு வரட்டியைக் கொண்டு புடமிட்டு எடுக்கவும். இவ்வாறு பத்து முறை செய்து முடித்து எடுத்த தாமிரம் 10 கிராம், வெள்ளி 10 கிராம், தங்கம் 10 கிராம் என எடுத்து உருக்கவும். நன்றாக உருகியதும் அதனை ஆறவிட்டு உடைத்து மீண்டும் முன்போன்றே உருக்கிடவும். இவ்வாறு நான்கு முறை உருக்கி எடுக்க நமக்கு வாதப்பொன் கிடைத்திடும்.

★ தாமிரத்தை தகடாக்கி சிறு வில்லைகளாக நறுக்கிக் கொண்டு அதன் எடைக்கு பத்து மடங்கு புங்கமரப் பட்டையை எடுத்து கல்வத்தில் இட்டு மைபோல பழச்சாறு விட்டு அரைக்கவும். அரைத்து எடுத்த விழுதினை அடை

களாகத் தட்டிக் கொண்டு ஒன்றின் மேல் தாமிரத்துண்டை வைத்து மற்றொரு அடையை வைத்து மூடி சீலைமண் செய்து உலர்த்தவும். இவ்வாறு மீதம் உள்ள தகடுகளையும் அடை களினுள் வைத்து முடி தனித்தனியே சீலை மண் செய்து உல்ர்த்திடவும்.

கவசத்தின் எடைக்கு பத்து மடங்கு என விராட்டிகளை எடுத்து இக்கவசங்களைப் புடமிட்டு எடுக்கவும். புடம் ஆறியதும் தாமிரத் தகடுகளைப் பிரித்து எடுக்கவும். இவற்றின் எடைக்கு பத்து மடங்காக புங்கமரப் பட்டையை மைபோன்று அரைத்து முன்போலவே செய்து ஒவ்வொன்றிற்கும் மூன்று சீலைமண் செய்திடவும். இவற்றின் எடைக்கு பத்து மடங்காக விராட்டிகளை வைத்துப் புடமிட்டு எடுக்கவும். இம்மாதிரியே ஏழுமுறை புடமிட்டு எடுக்கவும்.

பின் கூவிளங்காய் மரப்பட்டையை மைபோல அரைத்து தர்மிர வில்லைகளின் மீதாகப் பூசி கவசமிட்டு மூன்று சீலைமண் செய்து மறுபடியும் புடமிட்டு எடுக்கவும். இவ்வாறு புடமிட்டு எடுத்த தாமிரத் தகடுகளைப் பழுக்கக் காய்ச்சி எருமை சாணிப் பாலில் தோய்த்து எடுக்கவும். இதுபோன்று 21 முறைகள் செய்து முடிக்கவும்.

இதே போன்று ஆளி விதை எண்ணெயில் தாமிரத் தகடுகளைப் பழுக்கக் காய்ச்சி 21 முறை தோய்த்து எடுத்திட தாமிரத்தகடுகள் சுத்தியாகிடும். இவ்வாறு சுத்தி செய்த தாமிரத் தகடுகளை, மணத் தக்காளிச் சாறில் கந்தகத்தைச் சேர்த்துக் குழைத்து அதில் போட்டு நனைத்து உலர்த்திடவும்.

இவ்வாறு உலர்த்திய தாமிரத்தகடுகளை மீண்டும் புடமிட்டு எடுத்திடவும். இம்முறைப்படி 12 முறை புடமிட்டு எடுக்கவும். புடமிட்ட தாமிரம் 5 கிராம், வெள்ளி 10 கிராம் ஆகியவற்றை ஒன்றாகச் சேர்த்து மடக்கி மடக்கி மூன்று முறை உருக்கிடவும். உருக்கி எடுத்த கட்டியுடன் 5 கிராம் தங்கத்தை யும் சேர்த்து உருக்க நமக்கு ஐந்து மாற்றுள்ள பொன்

கிடைக்கும். இப்பொன்னை திருகுக்கள்ளிப் பாலில் நனைத்து காவிக்கல் பொடியுள் வைத்து அகலால் மூடி சீலைமண் செய்து புடமிடவும். இவ்வாறு மூன்று முறை புடமிட்டு எடுக்க வாதப் பொன் கிடைத்திடும்.

## 17. இரசவாதத்தில் மூலிகைகளும் அவற்றின் திறன்களும்

இரசவாதம் செய்ய விரும்பும் ஒருவர் தம் தொழிலுக்குப் பயன்படுத்தும் மூலிகைகள் மற்றும் அவற்றின் செயல் பாடுகள் பற்றியும் அறிந்து வைத்துக் கொள்வது மிகவும் நல்லது. இதேபோல் பாஷான உபரசங்கள், உப்புப் பாஷாண வகைகள் ஆகியவற்றையும் தெரிந்து வைத்துக் கொள்ள வேண்டும். முதலில் மூலிகைகள் பற்றித் தெரிந்து கொள்வோம்.

கருஊமத்தை என்னும் மூலிகை பாதரசத்தைக் கட்டும். உத்தாமணி மூலிகை எதனையும் சுண்ணமாக்கும். குமரி என்னும் கற்றாழையின் சாறு இரும்பைத் துரும்பாக்கும். ஓரிதழ் தாமரை கெந்தியை பற்பமாக்கும். வெண் பூசணி இடு மருந்து, பாஷாணத்தின் விஷம், வேக்காடு போன்றவற்றைப் போக்கும். புகையிலை வெடியுப்பினைச் சுண்ணமாக்கிடும்.

## 18. பாஷாண உபரசங்கள் மற்றும் திறன்கள்

அன்னபேதி இலிங்கத்தை மெழுகாக்கிடும். இராஜ வர்த்தக் கல் நவலோகத்தையும் வேதியாக்கிடும். உவர் மண் தாது பற்பமாக்கும். எலிமுள் வீரத்தை செம்பாக்கும். கருமணல் தங்கத்தைக் குருவாக்கும். கற்களி வெள்ளீயத்தை செம் பாக்கும். காரீயச்சிலை பச்சைக் கற்பூரத்தை செம்பாக்கும்.

காகச்சிலை காந்தத்தை செம்பாக்கும். கிளிஞ்சல் பாஷாணம், வங்கம் போன்றவற்றின் தோஷங்களை நீங்கும். சுத்த மண் அயத்தை செம்பாக்கும். செம்புச்சிலை கல்லுப்பை செயமாக்கும். சொர்ணபேதி நவலோகத்தை தண்ணீராக்கும். நாகப்பச்சை உருக்கினை செம்பாக்கும். அஞ்சணக்கல் சரக்குகள் அனைத்தையும் ஈயமாக்கும். ஆட்டுக் கொம்பு எல்லா உப்பையும் சுண்ணமாக்கும். உலோக நிமிளை இரும்பைக் குருவாக்கும். உலோக மணல் மனோசிலையை செம்பாக்கும். கஞ்சநிமிளை தங்கத்தைச் சுண்ணமாக்கும். கல் வெள்ளீயத்தை வெள்ளியாக்கும். கடுஞ்சுக்கான் குதிரைப்புல் பாஷாணத்தை செம்பாக்கும். காரீய மணல் லிங்கத்தை செப் பாக்கும். காகநிமிளை தராவை சுண்ணமாக்கும். சீலாவங்கம் பாஷாணத்தை பற்பமாக்கும். செம்மண் காரீயத்தை செம்பாக்கும். சூடாலைக்கல் நவலோகங்களைச் செந்தூர மாக்கும். சாலக்கிராமம் தங்கத்தை செம்பாக்கும். நாகச்சிலை நவலோகத்தை செம்பாக்கும். பன்றி முள் இரசத்தை வெண்மையாக்கும். மந்தாரப் பச்சை அயத்தை செம்பாக்கும்.

மஞ்சட்கல் கெந்தகத்தைச் செம்பாக்கும். மாக்கல் தாளகத்தை ஈயமாக்கும். மீன் எலும்பு கௌரி பாஷாணத்தை ஈயமாக்கிடும். முத்து இரசத்தை மணியாக்கும். யானைக் கொம்பு வெடியுப்பு கம்பியைக் கட்டும். வெள்ளை சுக்கான்கல் வெள்ளீயத்தை வெள்ளியாக்கும்.

பன்றிக் கொம்பு வீரத்தை குருவாக்கும். ஏமசிலை பாஷாணங்களை குருவாக்கும். மந்தாரச்சிலை சூடனை செம்பாக்கும். மாட்டுக் கொம்பு பாஷாணத்தை செந்தூர மாக்கும். மாந்தூளிர்கல் கெந்தகத்தை செம்பாக்கும். முட்டை வெள்ளீயத்தில் நீரை வாங்கும். முத்துச்சிப்பி நவச் சாரத்தைக் கட்டும். நண்டு சூதத்தைக் கட்டும். வெண்கலச் சிலை வெடியுப்பை செம்பாக்கும்.

# 19. உப்பு பாஷாணங்கள் மற்றும் திறன்கள்

அரிதாரம் வங்கத்தைக் கட்டும், நீராக்கும். அப்பிரகம் பாஷாணத்தைக் கட்டும். இலிங்கம் செந்தூரத்திற்கு ஆதியாகும். கல்பாஷாணம் காரியத்தைக் கட்டும். கந்தக பாஷாணம் ரசத்தைச் செந்தூரமாக்கும். கார்முகில் பாஷாணம் அரிதாரத்தைக் கட்டும். கெந்தி பாஷாணம் லிங்கத்தை சொர்ணமாக்கிடும்.

கோளக பாஷாணம் வெள்ளீயத்தை செந்தூரமாக்கும். சங்கு பாஷாணம் சூதத்தைச் செம்பாக்கும். சவ்வீரம் நவலோகத்தை சுண்ணமாக்கும். பாதரசம் காந்தத்தை ஈயமாக்கும். மிருதார் சிங்கி இரசத்திற்கு ஆதியாகும். நீலக்கல் பாஷாணம் வெள்ளியில் பசுமை நிறம் தரும். வெள்ளைப் பாஷாணம் வெள்ளீயத்தை சுண்ணமாக்கும். அஞ்சனக்கல் அயத்தைப் பற்பமாக்கும். அயத்தொட்டி பாஷாணம் களங்குகளுக்கு ஆதியாகும். இரசித பாஷாணம் நவலோகங் களையும் வெள்ளையாக்கும். கற்கடக சிங்கி பாஷாணம் நாகத்தைச் செந்தூரமாக்கும். கருவங்க நீர், இரசத்தை மட்டுமல்லாது கந்தகத்தையும் கட்டும். காகபாஷாணம் தாரத்தைக் கறுப்பாக்கும். கெந்தக பாஷாணம் ரசத்தை செந்தூரமாக்கும். கௌரிபாஷாணம் மற்றும் சங்கு பாஷாணம் ஆகியவை சூதத்தை செம்பாக்கும். சிவ மத பாஷாணம் செம்பினை வெள்ளியாக்கும். தொட்டிப் பாஷாணம் நாகத்தை செம்பாக்கும். மனோசிலை இரசத்தைக் கட்டும். நாக பாஷாணம், தாளக பாஷாணம் ஆகியவை நாகத்தைத் தங்கமாக்கும். வீரம் காரீயத்தை செம்பாக்கும்.

